# கல்கி

## பொருளடக்கம்

சோபகிருது, தை 6 — ஜனவரி 19



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



படவிளக்கம் 33ம் பக்கம் பார்க்க



உயிர் வாழ்கிற ஒரே கடவுள், நான் நம்புகிற ஒரே கடவுள் சகல ஜீவராசிகளின் கூட்டுத்தொகையான அந்த ஒரு கடவுள்தான். கடவுளாக உள்ள அந்த உயிர்க்குலத்தை வழிபடுவதற்காக நான் மீண்டும் மீண்டும் பிறவி எடுப்பேனாக! ஆயிரமாயிரம் துயரங்களை அநுபவிப்பேனாக!

— ஸ்வாமி விவேகானந்தர்



மலர் 23  தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்  இதழ் 25

# நூறாண்டு நிறைந்தது!

மகத்தான காரியங்களைச் செய்த தேசபக்தத் தலைவர்கள் பலர் விவேகானந்தருக்கு முன்னால் இருந்ததுண்டு. ஆனால் நம்முடைய பயமும் பலவீன உணர்ச்சியும் நம்மை விட்டு அகலும்படி செய்த தீரர் சுவாமி விவேகானந்தர்தான். அவருக்கு முன்பே வாழ்க்கையின் பல அம்சங்களிலும் சீர்திருத்தம் செய்ய விரும்பிய பல தலைவர்கள் இருந்தார்கள். ஆனால் தேசத்தில் ஏதோ ஒருவித பலவீன உணர்ச்சி, 'நாம் மேல் நாட்டவர்களுக்குத் தாழ்ந்தவர்கள்' என்ற உணர்ச்சி இருந்தது. இது நிவிருத்தியாகாதபோது எந்தச் சீர்திருத்தத்தாலும் பயனில்லை. பலவீன வியாதியைப் போக்க மருந்து தந்தவரே ஸ்வாமி விவேகானந்தர். சக்தி வாய்ந்த மருந்தாகத் தந்தார்.

"நீ எந்தத் துறையில் பலசாலியாக இருக்கிறாய் என்பதைப் புரிந்துகொள். அந்தத் துறையில் மேலும் பலசாலியாவதற்கு முயல்வாய்" என்று அவர் பாரத நாட்டை நோக்கிச் சிம்மநாதம் செய்தார். "இந்தியாவின் சிறப்பு அதன் ஆத்ம அநுபவத்திலேயே இருக்கிறது. அதில்தான் இந்தத் தேசத்தின் வாழ்வு நிறைவு பெற முடியும். ஆத்மிகத்தின் மூலமாகத்தான் இந்தியா உலகத்திலும் தனக்குரிய முக்கியமான இடத்தைப் பெற முடியும்" என்றார். இதுவே அவரது மகத்தான உபதேசம்.

கிறிஸ்துவ நாடுகளை நோக்கி "ஹிந்து மதத்தை இகழ்ச்சியாகப் பாராதீர். எங்கள் ஹிந்து மதம், 'மனிதன் தூய்மையானவன், பாபமற்றவன்; மயக்கத்தையும் பலவீனத்தையும் விட்டால் மனிதன் இங்கேயே தெய்விகத்தை நுகர முடியும்' என்கிறது. நாம் எல்லாரும் பாபத்திலேயே பிறந்தவர்கள் என்று துக்கிக்க வேண்டாம்" என்றார் ஸ்வாமி விவேகானந்தர்.

அச்சம் இருந்த இடத்தில் தீரத்தை நிலைநாட்டினார். நம்பிக்கைச் சங்கிலியால் மனிதனைக் கடவுளுடன் பிணைத்தார். பற்பல சித்தாந்தங்களின் கோட்பாட்டுப் பேதங்களைத் துடைத்துத் தள்ளி, அவை யெல்லாம் அடக்கமாகியுள்ள வேதாந்தத்தை ஒரு பெருமை வாய்ந்த, ஸ்திரமான மதமாக நிலைநாட்டினார். அரசியல், சமூகம் முதலிய எல்லாத் துறைகளையும் ஆத்மிகமே ஆளவேண்டும் என்று அவர் விரும்பினார். இவ்விஷயத்தில் அவரை காந்தி மகாத்மாவின் முன்னோடியாகக் கருதலாம். ஹிந்து மதத்தை நிகழ் கால மக்கள் ஏற்க வேண்டுமென்பதற்காக அதில் மாற்றங்கள் செய்யவேண்டும் என்று ஸ்வாமிஜி எண்ணவில்லை. ஹிந்து சமயத்தின் எல்லாப் பிரிவுகளையும் ஒன்றாகச் சேர்த்து அதை ஒரு பூரண உருவமாகக் கண்டார் ஸ்வாமிஜி. மகத்தான சத்திய சமயம் அது என்று கண்டார்.

மகா புருஷரின் நூற்றாண்டு விழா இப்போது பூர்த்தியாகிறது. இமாலயத்திலிருந்து குமரிமுனை வரையிலுள்ள சகல மக்களும் நமக்கு உத்வேகமளித்து உயர்த்திவிட்ட முனிவரை நன்றியுடன் வணங்குகிறார்கள். விவேகாநந்தர் வழிபட்ட ஆண்டவனை நம்முடைய எல்லாக் காரியங்களிலும் இருத்திக் கொள்வோமாக! அதன் வழியே நிமைகளை யெல்லாம் துரத்தி மங்களங்களை அடைவோமாக!

சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# நேருஜி நீடு வாழ்க!

அன்புக்குரிய பிரதமர் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்களுக்கு ரத்த அழுத்தக் கோளாறு உண்டானதாக அறிந்ததும் தேசம் முழுவதும் திடுக்கிட்டது. ஆனால் பத்திரிகைகள் பயமுறுத்திப் பிரபலப்படுத்திய அளவுக்கு அவருக்கு உடல் நலம் சீர்கெடவில்லை என்று இப்போது தெரிகிறது. ஆண்டவன் அருளினால் அவரது தேக ஆரோக்கியம் நல்ல நிலைமை அடைந்து வருவதில் நாடு ஆசுவாசமடைந்துள்ளது. பிரதமரவர்கள் பூரணமாகக் குணமடைந்து நீண்ட காலம் வாழ வேணுமென்று இன்று யாவரும் வாழ்த்துகிறோம்!

# 'சைவ' நரமாமிச பட்சிணி!

'இதென்ன விந்தை! நரமாமிச பட்சிணி 'சைவ'மாக இருக்க முடியுமா?' என்று வியப்பீர்கள். புவனேசுவரத்தில் காங்கிரஸ் கட்சி நாமகரணமிட்டுள்ள 'ஜனநாயக சோஷலிஸ'த்தை ராஜாஜி 'சைவ' நரமாமிச பட்சிணி என்றுதான் வருணிக்கிறார். சோஷலிஸம் என்ற பெயரில் நிறுவப்படவிருக்கும் சர்க்கார் சர்வாதிபத்தியம் என்கிற நரமாமிச பட்சிணியை ஜனநாயகம் என்ற வனஸ்பதிக் கொள்கையுடன் இணைத்திருக்கிறார்கள். 'பிற கட்சிகளே இல்லாமல் ஒடுக்குவதுதானே நர மாமிச பட்சணம்? அப்படிச் செய்வது கம்யூனிஸம்தானே? நாங்கள்தான் மற்றக் கட்சிகள் இயங்க அநுமதித்திருக்கிறோமே!' என்று காங்கிரஸ் தலைவர்கள் சொல்லலாம். என்றாலும், பிறகட்சிகள் இருக்கவே கூடாது என்று சட்டப்படி விதிக்காமலே, அவை உயிர்வாழ முடியாதபடி ஆளும் கட்சி காரியம் நடத்தி வருகிறது. எங்கள் சோஷலிஸத்தில் நிர்ப்பந்தமோ, ஹிம்சையோ கிடையாது; எவ்விதத்திலும் வகுப்புத் துவேஷ மனப்பான்மை உண்டாகாமலே எல்லாரையும் ஒரு மட்டமாக்கி சோஷலிஸம் நிறுவுவோம் என்று முழக்குகிறார்கள். உண்மையிலோ பகை உணர்ச்சி, அசூயை இவற்றின் விதையை






நாடெங்கும் தெளிந்து வருகிறார்கள். நல்ல அரசாட்சிக் கொள்கைகள் பற்றிக் காங்கிரஸ் கட்சிக்காரர்கள் புவனேசுவரத்தில் வெளியிட்ட கருத்துக்கள் பத்திரிகைகளில் பத்தி பத்தியாகப் பிரசுரமாகியுள்ளன. ஆனால் அரசியல் சாஸனத்தின் நான்காம் பிரிவில் சொன்னதற்கு மேல் நல்லாட்சிக்குப் புதுக் கொள்கைகளாவது நாமகரணமாவது தேவையில்லை. 'க்ஷேமாபிவிருத்தி சர்க்கார்' என்று கூறப்படும் அரசாங்கத்தை சோஷலிஸமில்லாமலே நிறுவ முடியும் என்பதுதான் மூல அரசியல் சாஸனத்தின் திடமான முடிவு. இதனால்தான் மூன்றாம் பிரிவில் தனி மனிதர்களின் கருத்துரிமை, தொழிலுரிமை, சொத்துரிமை இவைகளை ஸ்திரப்படுத்திவிட்டு, அதற்கு அப்புறமே, நான்காம் பிரிவில் க்ஷேம அபிவிருத்திக்கு அரசாங்கம் பின்பற்ற வேண்டிய வழிகளைக் கூறுகிறது சாஸனம். பதினைந்து ஆண்டுகளுக்கு முன் ஏற்றுக்கொள்ளப்பட்ட அந்த மூன்றாம் பிரிவைச் சிதிலமாக்கி இன்று நல்லாட்சிக் கொள்கைகள் என்பதாக மாய சித்தாந்தங்களை நாடிப் போகிறார்களே, இது நியாயமாகுமா, என்பதே இப்போது ஜனநாயக வாதிகளின் கவலையாகும்.

என்னதான் சொற் சிலம்பம் ஆடினாலும் சோஷலிஸ ஏற்பாடுகள் ஏக கட்சி ஏகாதிபத்தியத்துக்குத்தான் வழி கோலுகிறது என்பது பிரத்தியட்ச உண்மை. கொள்கைகளை வகுக்கிற இந்தக் கட்சிக்காரர்களும், கட்சிக்கு நேர் முகமாகவோ மறை முகமாகவோ அடங்கியும் பயந்தும் நடக்கும் அதிகார வர்க்கத்தினரும் எந்த அளவுக்கு சோஷலிஸ உபகரணங்களைக் கொண்டு தங்கள் சுய பலத்தை வளர்த்துக் கொள்வார்கள், காங்கிரஸ் கட்சியின் பலத்தை அசைக்க முடியாதபடி வளர்ப்பார்கள் என்பதற்கு வரம்பே கிடையாது. சர்க்காரிடம் — அதாவது சர்க்காரை நடத்தும் காங்கிரஸ் கட்சியிடம் — சோஷ

லிஸம் அளிக்கும் அதிகாரங்கள் குவிவதால் அவை எவ்வளவு துஷ்பிரயோகமாகும் என்பதைப் புவனேசுவரச் சந்தையில் கூடிய பாமரர்கள் தீவிரமாக எண்ணிப் பார்க்கவில்லை.

காங்கிரஸின் சோஷலிஸ வாதத்தில் பல இனத்தவர் இருப்பதாக எண்ணி, இடதுசாரி என்றும், வலதுசாரி என்றும், நடுநிலைமையாளர் என்றும் காங்கிரஸ்காரர்களுக்குள் கோஷ்டிகளைப் பிரிப்பதில் சாரமில்லை. எல்லோரும் சுயமுன்னேற்றத்தைத் தேடி அலையும் ஒரே கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்தான்.

இருந்தபோதிலும் காங்கிரஸ் மகாநாட்டில் ஒருசிலர் பேசியுள்ள பாணியிலிருந்து அந்தக் கட்சியிலும் சோஷலிஸ சர்வாதிபத்தியம் குறித்துச் சந்தேகமும் குழப்பமும் இருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் நாற்பத்தைந்து கோடி மக்களுக்குப் பொறுப்பு வகிக்கும் ஆளும் கட்சியில் மிகப் பெரும்பான்மையினர் காட்டும் இளக்கமின்மை பயங்கரமாக இருக்கிறது. 'தாமே புத்திமான்கள் என்றும், எல்லாம் தெரிந்தவர்கள் என்றும் நினைத்துத் தடுமாறி, குருடர்களால் வழி காட்டப்பட்டுச் சுற்றுகிற குருடர்களை'ப் பற்றிக் கடோபநிஷத முனிவர் பாடியதுதான் புவனேசுவரக் காங்கிரஸை எண்ணும்போது நினைவு வருகிறது.

## துயரம் பெருகுகிறது!

**உ**ணவு உற்பத்தியைப் பற்றிச் சர்க்கார் பேசும் பேச்சுக்கும், விதிக்கும் சட்டங்களுக்கும் ஒரு குறைவுமில்லை. உற்பத்தி பெருகுகிறதா என்றால், அதுதான் இல்லை. பெருகுவதாகப் புள்ளி விவரங்களும் அவ்வப்போது காட்டுகிறார்கள். இந்தப் புள்ளி விவரங்களின் இலட்சணத்தைப் பற்றி திரு ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்கள் மனம் கசந்து எழுதியதைச் சென்ற 'கல்கி' இதழில் பார்த்தோம்.

உணவை உற்பத்தி செய்யும் உழவர்களின் வாழ்நிலை தாழ்ந்து வருகிறது. அவர்கள் வறுமையிலும், கடன் உபாதையிலும் சிக்கித் தவிக்கிறார்கள். சராசரியில் ஒவ்வொரு விவசாயக் குடும்பமும் 654 ரூபாய் கடன் பட்டிருப்பதாக **ரிஸர்வ் பாங்கியின் அறிக்கை** கூறுகிறது. எல்லா ராஜ்யங்களிலும் ஐம்பது சதவிகித விவசாயிகள் கடனாளியாக இருக்கிறார்கள் என்கிறது அறிக்கை. நமது தமிழகத்திலோ எழுபது சதவிகித விவசாயக் குடும்பங்கள் கடன் பட்டிருக்கின்றன. சென்ற ஆண்டில் பழைய கடன்களில் அடைத்ததைப் போல இரண்டு மடங்கு புதுக் கடன்கள் வாங்கியிருக்கிறார்கள். அதாவது வருஷத்துக்கு வருஷம் விவசாயிகளின் கடன் சுமை பெருகி வருகிறது. வள்ளுவர் காலத்துக்கும் முன்னிருந்தே நாட்டின் தலையாய தொழிலாகக் கருதப்பட்ட உழவை ஏற்று நற்பணி புரிபவர்களின் இன்றைய துர்க்கதிக்கு அரசாங்கம்தான் பதில் சொல்ல வேண்டும்.

## தனியார் துறையின் சாதனை

**சா**க்குப் பைக்குள் புகுந்துகொண்டு ஓடும் விளையாட்டுப் பந்தயமொன்று உண்டு. பள்ளிக்கூடத்தில் விளையாட்டாக இருந்த இந்தச் சாக்குப்பைப் பந்தயமே இன்றைய இந்தியாவில் வினையாக வந்து நமது தனியார் தொழில்துறையை வருத்துகிறது. தனியார் தொழில் துறையினருக்குள்ள நிர்ப்பந்தங்களும், முட்டுக்கட்டைகளும் சொல்லி முடியாது. அதிகாரிகளையும், ஆளும் கட்சிக்காரர்களையும் நம்பியே அவர்கள் வாழ வேண்டியிருக்கிறது. அப்படியிருந்தும் தனியார் மூலம்தான் தொழில் செழித்து வருகிறது. அகில இந்திய வர்த்தக மகாசபை வெளியிட்டுள்ள ஓர் அறிக்கையிலிருந்து இந்த உண்மை உள்ளங்கை நெல்லிக்கனி போல் வெளியாகிறது. இன்று சர்க்கார் தொழிலில் நூறு ரூபாய் முதலீட்டுக்கு அரைரூபாய் வருமானமே கிடைக்கும் விந்தையைப் பார்க்கிறோம். ஆனால் சிறுகச் சிறுகத் தனியாரின் இடத்தைப் பெற்று நாட்டின் முதலீட்டில் நாற்பத்தைந்து சதவிகிதத்தைச் சர்க்கார் கைப்பற்றியுள்ளது. மீதியுள்ள ஐம்பத்தைந்து சதவிகித மூலதனத்தைக் கொண்டு தனியார் தொழிலானது சர்க்காரின் செயல்களையும் எல்லா இக்கட்டுகளையும் கடந்து, நாட்டு வருமானத்தில் எண்பத்தைந்து சதவிகிதத்தை உற்பத்தி செய்திருக்கிறது. பெருமிதம் கொள்ள வேண்டிய சாதனைதானே! சோஷலிஸம் பேசுபவர்கள் சிந்திப்பார்களா?

# முதல் மூவர்



ராஜாஜி-சோமு

## 41

**அது நன்று இதுதீது என்று**
**ஐயப் படாதே**

*இறைவனைத் தொழுவதற் குரிய முறைகளிலே எந்த முறையை அநுசரிப்போம், எது நல்லது எது தவறானது என்று மனக்கலக்கம் ஏதும் இல்லாமல்,*

**மதுநின்ற தண்துழாய்**
**மார்பன் — பொதுநின்ற**
**பொன்னங் கழலே**
**தொழுமின்**

*[மதுநின்ற - தேன் நிரம்பியுள்ள. தண்துழாய் மார்பன் - துளப மாலையை அணிந்த மார்பனுகிய திருமாலின். பொதுநின்ற - யாருமே எளிதில் சரணம் அடையும்படி நிற்கிற. பொன்னங் கழலே தொழுமின் - பொன்னுன அழகிய திருவடிகளைத் தொழுவீர்களாக.]*

**முழுவினைகள்**
**முன்னம் கழலும்**
**முடிந்து**

*[முழு வினைகள் - முன் ஜன்மங்களில் செய்த பாவங்கள் அனைத்தும். முடிந்து கழலும்-மிச்சமின்றி முற்றும் விட்டோடி விடும்.]*

*மனத்தில் எவ்விதமான சந்தேகமும் இல்லாத நிலையில் அவனை சரண் என்று முடிவு செய்துகொண்டு எம் பெருமானுடைய திருவடிகளைத் தொழுதோமானுல், ஜன்ம ஜன்மாந்திர வினைகளின் பாவம் அனைத்தும் முற்றும் நசித்துப் போகும் என்கிருர் ஆழ்வார்.*

**அதுநன்று இதுதீதென்று**
**ஐயப் படாதே**
**மதுநின்ற தண்துழாய்**
**மார்பன் - பொதுநின்ற**
**பொன்னங் கழலே**
**தொழுமின் முழுவினைகள்**
**முன்னம் கழலும்**
**முடிந்து**

*இது கீதையில் சரம சுலோகமாகக் கருதும் மந்திரத்தின் பொருள்.*

**ஸர்வ தர்மான் பரித்யஜ்ய**
**மாம் ஏகம் சரணம் வ்ரஜ**

முறைகளை எல்லாம் ஆராய்வதை விட்டு என்னைச் சரணம் அடைவதே வழி என்று என்னை அடையுங்கள்.

*'ஸர்வ தர்மான் பரித்யஜ்ய'* என்று வடமொழியில் இருப்பதை வெகு அழகாக ஆழ்வார் தமிழில் 'அது நன்று இது தீதென்று ஐயப்படாதே' என்கிருர்.








❁❁❁

1. இம்மாதம் மூன்றும் தேதியன்று திருவையாற்றில் சத்குரு ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் ஆராதனைத் திருவிழா நடைபெற்றது. வித்துவான்களும் விதுஷிகளும் பஞ்சரத்தினக் கீர்த்தனைகளைப் பாடினர். 2. ஆராதனைக்கு முன் தினம் திருவையாற்றில் நடைபெற்ற இன்னொரு திருவிழாவில் மகா வித்துவான்களான மகாராஜபுரம் ஸ்ரீ விசுவநாதய்யரும், கும்பகோணம் ஸ்ரீ ராஜமாணிக்கம்பிள்ளையும் முதன் மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் அவர்களின் தலைமையில் கௌரவிக்கப்பட்டார்கள். 3. இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் விழாவில் ஸ்ரீ எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமிக்கு ஸ்ரீ அரியக்குடி 'சங்கீத கலா சிகாமணி' என்ற விருதை அளித்தார். 4. மியூஸிக் அகாதமியின் சதஸில் புதலூர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளுக்கு 'சங்கீத கலாநிதி' விருதைச் சூட்டுகிறார் ஸ்ரீ செம்மங்குடி. 5. அகாதமியில் நிறுவப்பட்டுள்ள கல்கி நினைவுப் பரிசான தம்புராவை ஸ்ரீமதி ஜானகி சந்தரராஜன் பெற்றுக் கொள்கிறார்.








# அறிவுக் கனலே, அருட் புனலே!

ரா. கணபதி

50

மார்ச் பதினைந்தாம் தேதியன்று குருநாதருக்கு நோவு சிறிது குறைந்திருந்தது. ரகசியக் குரலாலும் சைகைகளாலும் சிஷ்யர்களுடன் சம்பாஷித்துக்கொண்டிருந்தார் அவர்.

''நான் காண்பதென்னவென்று நீங்கள் அறிவீர்களா?'' என்று தொடங்கினார். ''அவன் ஒருவன்தான் எல்லாமாகவும் ஆகியிருக்கிறான். மனிதர்களையும், மிருகங்களையும் நான் பார்க்கும்போது அவை சட்டையணிந்த வெறும் சட்டங்களாகத்தான் தோன்றுகின்றன. அவற்றுக்குள் அவன் இருந்து அவற்றின் கைகளையும் கால்களையும் ஆட்டுவதை நான் காண்கிறேன்....''

பட்டிமைக் குரலில் பரமஹம்ஸர் முனகினார்:

''கொலையாளியாக இருப்பவனும் ஆண்டவனே. அவனேதான் கொலையுண்டு சாகிறவனும். கொலை நடக்கும் பீடமும் அவனே என்று நான் காண்கிறேன். அதோ ஆடு உட்கார்ந்திருக்கிறான் — தலையைக் கையால் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான். சர்வேசுவரனேதான் அப்படி உட்கார்ந்திருக்கிறான் — தலையைக் கையால் பிடித்துக் கொண்டு ஆடுவாக உட்கார்ந்திருக்கிறான்—என்று எனக்குத் தெரிகிறது.''

ஒவ்வொரு சிஷ்யர் மீதாக அவருடைய கோமளமான பார்வை துவண்டு சென்றது. எல்லோரையும் பரப்பிரம்மமாகப் பார்க்கும் பார்வையல்லவா அது? அம்பிகையைக் கண்டு இனித்த அந்தக் கண்களின் பார்வை யாவர் மீதும் அன்பின் இனிமையை மூலாம் பூசிற்று.

ராகாலையும், நரேனையும் அன்னையைப் போல் முத்தமிட்டார் குருமஹராஜ். மஹேந்திரரைப் பார்த்து, ''இந்த உடல் மட்டும் இன்னும் வெகு காலம் இருக்க அனுமதிக்கப்பட்டால் மேலும் பலர் ஆத்மிக விழிப்புப் பெறுவார்கள்'' என்றார் - சுயவுணர்வு கலக்காமல் தன்னையே புறத்திருந்து பார்த்து மொழிந்தார். சிறிது நேரம் மௌனம் நிலவியது. ''ஆனால் அன்னையின் விருப்பம் அதுவல்ல'' என்று மெல்லக் கூறினார்.

''அன்னையின் விருப்பம் அதுவல்ல'' என்று மீண்டும் கூறியவர் ''அவளுடைய ஆக்ஞை வேறு விதமாயிருக்கிறது. என்னுடைய எளிமையையும் படிப்பின்மையையும் பயன்படுத்திக் கொண்டு, மக்கள் தங்கள் தகுதிக்கு மீறிய வரங்களை என்னிடம் கேட்டுப் பெற்றுக் கொண்டு விடுவார்கள். இது

கூடாதென்று என் அன்னை என்னை எடுத்துக்கொண்டு விடுவாள்...''

சிஷ்யர்களை மீண்டும் அன்பு தவழ நோக்ினார் பரமஹம்ஸர். நிலவுப் படலம் போல, சந்தனப் பூச்சுப் போல, ஹம்ஸ தூளியின் ஸ்பரிசம் போல அந்த நோக்கு சிஷ்யர்களை ஹிதமாகத் தழுவியது. அன்பெனும் காசிப் பட்டால் அவர்களைப் போர்த்தியது. அந்தப் போர்வையை அவர்கள் மீது நன்கு படிய வைப்பதற்காகத் தெளிக்கும் பனித் துளி போல் குளிரக் குளிரக் குருநாதர் பேசுவார்: ''இவ்விடத்தில் இருவர் இருக்கிறார்கள். ஒன்று ஆண்டவன். மற்றது ஆண்டவனுடைய பக்தன். பின்னவனுக்குத்தான் வியாதி வக்கை யெல்லாம். நான் சொல்வது புரிகிறதோ?''

யாருக்கு அந்தப் பதங்களின் முழுப் பொருளும் தெரிய முடியும்? ஜீவாத்மா பரமாத்மா இருவரும் இரு பக்ஷிகளாக நெருங்கி யிருந்தாலும் ஜீவாத்மா மட்டும் கனிகளை உண்பதாகவும், பரமாத்மா அதனை வெறுமனே பாராமல் பார்த்துக் கொண்டிருப்பதாகவும் கூறும் உபநிஷத மந்திரத்தையே பரமஹம்ஸரும் வேறு சாயலில் கூறிவிட்டாரோ? சீடர்களில் யாருமே வாய் திறக்கவில்லை.

''ஐயோ! இதை நான் யாரிடம் சொல்வேன்? யார் புரிந்து கொள்வார்கள்?'' என்று அரற்றினார் பரமஹம்ஸர். சற்று நிதானமடைந்து, ''அவன் ஒரு மனிதனாக — அவதாரமாக — வருகிறான். தன் பக்தர்களையும் அவனே அழைத்துக் கொண்டு வருகிறான். பக்தர்களும் அவனோடு திரும்பி விடுகிறார்கள்.... தேசாந்தரிப் பாடகர்கள் ஒரு வீட்டுக்கு முன்னால் திடீரென்று ஒரு கும்பலாகத் தோன்றுகிறார்கள். பாடி ஆடுகிறார்கள். வந்தது போலவே போயும் விடுகிறார்கள். அவர்கள் இன்னார் என்பதைக் கூட யாரும் தெரிந்து கொள்வதில்லை...

''உருவம் என்று ஒன்று இருக்கும் வரை துன்பத்தைத் தவிர்க்க முடியாது. இனிமேல் நான் உருவமே எடுத்துக்கொள்ளாமல் இருக்க வேண்டும் என்று சில சமயங்களில் விரும்புகிறேன். ஆனால் கேடயத்துக்கு இரண்டு பக்கமல்லவா? இன்னொரு பக்கத்தில் இப்படி எழுதியிருக்கிறது: 'உடல் இருப்பதால் தானே தெய்விக ஆனந்தத்தைச் சுவைக்க முடிகிறது?' என்று. இல்லாவிடில் எல்லாமே சுவையற்றுப் போகும்.. பகவான் உருவம் தரிப்பது தன் பக்தர்களுக்காகத்தான்'' என்றார்.

'ஜீவர்கள் பிரம்மமாக வேண்டுமென்பதிருக்க, இதற்கு நேர்மாறாக அந்தப் பிரம்மம் ஏன் ஜீவர்களாகத் தோன்றுகிறது?'—என்ற கேள்விக்குத்தான் பரமஹம்ஸர் விடை கூறிவிட்டாரா? நான் ஆனந்தமாயிருக்கிறேன் என்பதை அறியும் உணர்வுக்கும் மேம்பட்ட நிலையிலுள்ள பரம்பொருள், ஜீவர்களாகித்தான் ஆனந்த ரூபி என்பதை அறியும் ஆனந்தத்துக்காகத் தான் இப்படி உலகாகவும், உலக மக்களாகவும் தோன்றுகிறதா ?

புண்ணுண்ட தொண்டையால் இவ்வளவு காலமும் பேசி வந்த ஆசான் மிகவும் ரகசியக் குரலில், ''மனிதன் துறந்தேயாக வேண்டும். ஒரு பொருளை இன்னொரு பொருளின் அடியில் வைத்துவிட்டு பிறகு அதை எடுக்கவேண்டுமென்றால், அதற்கு முன்பு அதன்மேலுள்ளதை எடுக்கத்தானே வேண்டும்?'' என்றார்.

ஆத்ம தரிசனம் பெற முடியாமல் நம்மை வீடு வாசல்களால் மூடிக் கொண்டிருப்பதால் அவற்றை முதலில் களைந்தால்தான் ஆத்மாவைப் பெறலாம் என்பதை இப்படித் தெரிவித்தார்.

இப்படிக் கூறியவர் நரேனை நோக்கி, ''நீ துறவறத்தை நோக்கி விரைவாகச் சென்று கொண்டிருக்கிறாய்'' என்றார்.

''இப்போதெல்லாம் நரேந்திரர் உங்களைப் பூரணமாக ஏற்றுக் கொண்டு விட்டார்'' என்று மகிழ்ச்சியுடன் கூறினார் ராகால். 'கடவுளுக்கு உருவமும் உண்டு' என்பதை நரேந்திரர் எப்போது ஒப்புக் கொள்ளுவார்? உருவமுள்ள கடவுளை வழிபடும் குருநாதரை என்று முழுதும் நம்பி ஏற்றுக் கொள்ளுவார்?' என்று ராகால் உள்ளூறக் கவலைப்பட்டிருக்க வேண்டும். அந்தக் கவலை தீர்ந்த மகிழ்ச்சியிலேயே இப்போது பரமஹம்ஸரிடம் இவ்வாறு கூறினார்.

''ரொம்பப் பேர் இப்போதுதான் இவ்விடத்தைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றார் குருமஹராஜ். பிறகு எல்லாரையும் நோக்கி, ''எல்லாம் இவ்விடத்திலிருந்துதான் வந்தது என்று இப்போது நான் உணர்கிறேன்'' என்று கூறிவிட்டு நரேந்திரரைப் பார்த்து, ''எவ்விடத்திலிருந்து? தெரிகிறதா?'' என்று கேட்டார்.

''சிருஷ்டிக்கப்பட்ட எல்லாப் பொருள்களும் உங்களிடமிருந்துதான் வந்தது ஸ்வாமி'' என்றார் நரேந்திரநாத் தழுதழுக்க.

அவதார உண்மையையும் நரேந்திரர் ஏற்றுக்கொண்டதில் பரமஹம்ஸர் ஆனந்தமடைந்தார். தம்மை அவதாரம் என்றதற்காக அல்லவே

அல்ல. மக்களுக்கு இறங்கிப் பரமன் மக்களில் ஒருவனாக வருவான், தனது ஈசுவர பதவியைத் தியாகம் செய்வான் என்ற நம்பிக்கையைத் தம் ஆருயிர் சீடர் பெற்றாரே என்றுதான் களிகொண்டார். ராகாலை நோக்கி, "பார்த்தாயா? அவன் புரிந்து கொண்டுவிட்டான்!" என்று கூறி ராகாலையும் மகிழ்ச்சி கொள்ளச் செய்தார்.

துறவின் பெருமை பற்றி குருநாதர் பேசியது, அரச போகத்தைத் துறந்த புத்தரது நினைவை நரேந்திரருக்கு ஏற்படுத்தியது. க்ஷத்திரிய வம்சத்தில் பிறந்தது, யௌவனப் பருவத்தில் சத்திய ஞானத்தைப் பெற வேண்டும் என்று துடியாகத் துடித்து, நானாவிதமான ஐயங்களால் மொத்துண்டது, துறவறத்தில் நாட்டம் கொண்டது, பொதுமக்களுக்கு இரங்கும் தயையின் பெருமையை மதித்தது இவற்றில் புத்தருக்கும் நரேனுக்கும் ஓர் ஒற்றுமை இருந்ததல்லவா?

புத்தகயாவில் உள்ள போதி விருக்ஷத்தின் அடியிலேயே தாமும் தியானம் புரியவேண்டும் என்ற ஆர்வம் நரேனுக்கு எழுந்தது. இதனை அவர் தாரக், காளி இருவருக்கு மட்டுமே கூறினார். ஏப்ரல் மாதத் தொடக்கத்தில் மூவரும் கயா க்ஷேத்திரத்துக்குப் புறப்பட்டனர்.

காசிப்பூரில் நரேந்திரர் இல்லாமல் மற்றச் சிஷ்யர்களுக்கு இருப்பாகவே இல்லை; நரேந்திரரை ஒரு நாள் காணாவிட்டாலும் கூடத் துடித்த பரமஹம்ஸரோ அமைதியாகவே இருந்தார். "எதற்காக இப்படிவிசாரப்படுகிறீர்கள்? அவன் எங்கே போய் விடுவான்? எவ்வளவு காலம் அவனால் அங்கெல்லாம் இருக்க முடியும்? தானே வந்து சேருவான்" என்று கூறி மற்றவர்களையும் நிதானமாக இருக்கப் பணித்தார் பரமஹம்ஸர். சிரித்துக்கொண்டே, "இந்தப் பூமி முழுவதையும் வேண்டுமானாலும் சுற்றிச் சுற்றிப் பாருங்கள். எங்கேயும் உண்மையான மதத்தைக் காண முடியாது. இந்த உலகத்தில் எவ்வளவு ஆன்மிகம் உள்ளதோ அவ்வளவும் இவ்விடத்தில்தான் (தம் இதயத்தைச் சுட்டிக் காட்டி) இருக்கிறது" என்று குறும்பு கமழக் கூறினார் குருநாதர். 'தம் ஒருவரிடம்' என்று அவர் சொன்னாரா, ஒவ்வொருவருக்குமே அவரவரது இதயத்தில்தான் பூரண ஞானமும் உள்ளது என்றாரா?

கயையிலிருந்து நரேந்திரர் திரும்பியதும் பிரயாண விவரம் முழுவதையும் கூறுமாறு குழந்தையின் ஆர்வத்துடன் அவரைக் கேட்டார் குருமஹராஜ்.



"எங்க டிராமாவுக்கு சின்னப் பொண்ணுதான் தேவைப்படுகிறது. உங்க வயது என்ன?"
"சரியாகப் பதினாறு வயசும் சில மாதங்களும்தான்"
"சில மாதங்கள் என்றால்?"
"சுமார் இருநூறு இருக்கும். அவ்வளவுதான்"

புத்தக் கோட்பாடுகள் பற்றிச் சண்டப் பிரசண்டமாகப் பேசினார் நரேந்திரர். அவரை ஸ்ரீ ராமகிருஷ்ணர் பரிவொழுகப் பார்த்தார். "அதெல்லாம் சரி. நீ இவ்விடத்தில் எல்லாவற்றையுமே காண்கிறாய் அல்லவா? இது ஒரு பல சரக்குக் கடை. இங்கே திப்பிலியிலிருந்து எல்லாம் இருக்கிறது" என்றார்.

ஆஹா! இதைவிட அழகாக ஸ்ரீ பரமஹம்ஸ ராமகிருஷ்ணரைச் சுருங்கக் கூறி விளங்க வைக்க முடியுமா? சாக்தர்களின் வாமாசாரத்திலிருந்து அத்வைத முக்திவரை எல்லாம் அல்லவோ ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் குடிகொண்டிருந்தன?

ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்கள் என்ற பெயரில் இன்று உலகெங்கும் அன்புப் பணி புரிந்து வரும் ஸ்தாபனங்களுக்கு வித்திட்ட புனித விழா காசிப்பூரில்தான் நடைபெற்றது. படாடோபமில்லாமலே பரமஹம்ஸர் அந்த ஸ்தாபனத்தை நிறுவி விட்டார்.

மூத்த கோபாலர் ஒரு நாள் சாதுக்களுக்கு விநியோகிப்பதற்கென காஷாய வஸ்திரங்களும், ருத்ராக்ஷங்களும் கொண்டு வந்து பரமஹம்ஸரிடம் சமர்ப்பித்தார்.

"இதோ துறவற உணர்வு நிரம்பிய குழந்தைகள் இருக்கிறார்கள். இவர்களை

விட உயர்ந்த சாதுக்களை நீ எங்கே காணப் போகிறாய்? காஷாயத்தையும், ருத்திராக்ஷங்களையும் இவர்களுக்கே வழங்கி விடலாம்'' என்றார் பரமஹம்ஸர்.

அந்த எளிய சிறுவர்களைத் தம் அருகே அழைத்தார் அருளாளர். அவர்களுக்குத் தாமே மந்திரோபதேசம் செய்தார். உள்ளுற அவர்களைச் சந்நியாசிகளாக்கினார்.

'உலகம் முழுவதும் உன் பணிக்குக் காத்திருக்க உனது முக்தியை மட்டுமோ நினைந்தாய்?' என்று குருமஹராஜ் நரேந்திரரைக் கடிந்து கொண்டது உண்மைதான். எனினும் தாம் இன்னதென்று அநுபவித்தறியாத பிரம்ம நிலையை மற்றவர்களுக்குப் போதித்தால் அது பொய் சொல்வதற்கு ஒப்பேயாகும் என நரேந்திரர் எண்ணினார் போலும்! எனவே, அத்வைத அநுபவத்தை அநுக்கிரகிக்க வேண்டும் என்று குருதேவரை எவ்வளவோ நச்சரித்து விட்டார். இப்போது அவர் நச்சரிக்காமலே அந்த மகாபாக்கியம் அவருக்குக் கிட்டிவிட்டது.

ஒரு நாள் மாலை நரேந்திரர் தியானிக்க அமர்ந்தார். திடீரென்று தமது தலைக்குப் பின்புறத்தில் ஓர் ஒளி வீசுவதை உணர்ந்தார் அவர். அதன் பிரகாசம் கணத்துக்குக் கணம் அதிகமாயிற்று. அளவிலும் அது பெரிதாகிக் கொண்டே போயிற்று. பிறகு அது வெடிப்பதைப் போலத் தோன்றியது. நரேந்திரரின் மனசு அதில் ஒன்றி விட்டது. அதற்கப்புறம் என்ன நடந்தது என்பதை எப்படிச் சொல்ல முடியும்? 'பேசா அநுபூதி பிறந்ததுவே' என்று தான் கூற வேண்டும்.

''சமாதி ஸ்தோத்திரம்'' (Hymn of Samadhi) என்ற தலைப்பில் நரேந்திரர் எழுதியுள்ள கவிதையைப் படித்தால் அவரது உணர்வைப் பற்றிச் சிறிது அறிய முடியும்.

**பனிமதியில்லை பரிதியுமில்லை**
**வெளிதனில் ஒளிகள் ஒளிந்தே மாண்டன**
**அண்டமும் பிண்டமும் அகண்ட சூனியத்தில்**
**நிழல்களின் நினைவாய் நீந்தி மறைந்தன**

**உள்முகமான உள்ள வெளிதனில்**
**உலக நிழல்கள் உதித்து உலாவின**
**'நான்' எனும் உணர்வின் ஓட்டமதனிலே**
**நானில மெல்லாம் நலிந்தே ஒடுங்கின**

**உலகின் படைப்பும் இருப்பும் அழிவும்**
**பலபல அலையாய் அகத்தே அடங்கின**
**மந்த மந்தமாய் நிழல் மந்தைகள்**
**மறைந்தன ஆதிக் கருப்பை தனிலே**
**அந்த மடையா அகவுணர் வொன்றே**
**சுந்தரப் பெருக்காய்ச் சுரந்து நின்றது**
**அற்புதம் காணும்! அதுவும் ஒழிந்தது!**
**அகம் எனும் உணர்வின் ஓட்டமும் நின்றது!**
**வெளிதனில் வெளியது வெளிறி மறைந்தது**
**அறியவும் உரைக்கவும் அரிய நிலையது;**
**அநுபவம் கண்டவன் அவனே உணர்வான்!**

மோன அமைதியைக் கலைத்துக் கொண்டு, ''கோபாலா, கோபாலா! என் உடம்பு எங்கே?'' என்று நரேந்திரர் கூவுவது மூத்த கோபாலரின் செவியில் பாய்ந்தது. அத்வைத நிலைக்கு ஒரு படிகீழேயிருந்த நரேந்திரர் தமது சிரஸை மட்டுமே உணர்ந்தார்; மற்றபடி உடம்பின் உணர்வையே மறந்துவிட்டிருந்தார். ''இதென்ன நரேன்? இதோ இங்கேயேதான் உங்கள் உடம்பு இருக்கிறதே!'' என்றார் கோபால் பதற்றத்துடன். நரேனின் உடம்பு ஏன் இப்படி விறைத்திருக்கிறது என்று அதிசயித்துப் பயந்தார் அவர். ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் ஓடினார். அவர் சாந்தமே இறுகிய சத்துவப் பொருளாகப் பொலிந்து கொண்டிருந்தார். நடந்ததெல்லாம் தமக்குத் தெரியும் என்ற பாவம் அவர் முகத்தில் இலங்கியது. ''நரேனைக் காப்பாற்றுங்கள்'' என்று கோபாலர் பீதியுடன் பிரார்த்தித்த போது அவர், ''எல்லாம் அவன் அப்படியே இருக்கட்டும். இதற்காக அவன் என்னை எவ்வளவு தொண தொணப்பி யிருக்கிறான், தெரியுமா?'' என்று குறும்பு செய்தார்.

இரவு ஒன்பது மணிக்குத்தான் நரேந்திரர் சுயப் பிரக்ஞை பெறுகிறார் என்பதற்கு அறிகுறி கண்டது. ஆனந்த வெள்ளத்தின் அலை நுனிகள் தம்மை நக்கிக் கொடுப்பது போன்ற புல்லரிப்பு உண்டாயிற்று நரேந்திரருக்கு. 'அத்வைதக் கடலிலிருந்தே அனந்தமான சம்பிரதாய நதிகளும் பிறந்தன; அதிலேயே அவை சங்கமமும் ஆகின்றன' என்பதை உள்ளத்தின் ஒவ்வோர் அணுவாலும் உணர்ந்து விட்டார் நரேன்.

குருநாதரிடம் சென்று, அவரது அநுக்கிரஹத்தை நினைந்து விநயமாக நின்றார் நரேந்திரர். அவரது நளின நயனங்களை, நனைந்த நயனங்களைக் கூர்ந்து கவனித்த குரு சொல்வார்:

''கண்மணி, நரேந்தர்! ஜகன்மாதா உனக்கு எல்லாவற்றையும் உணர்த்தி விட்டாள். மிக உயர்ந்த செல்வக் குவியலைப் பெட்டியில் வைத்துப் பூட்டுவது போல் இப்போது நீ பெற்ற அநுபவத்தையும் பூட்டியாக வேண்டும். அதனைத் திறக்கும் திறவுகோல் என்னிடம் இருக்கும். நீ காரியம் பல செய்தாக வேண்டியிருக்கிறது. செய்து முடித்தவுடன் அநுபூதிப்பெட்டி மீண்டும் திறக்

காலம் பறக்கிறது...ஆயினும் அவள் எழில் நிலைக்கிறது



கண்டான். கண்டதும்
மையல் கொண்டான். அவளு
டைய பேரெழில் அவனை மயக்கிற்று.
காதல் கடிமணம் நடந்தது. ஆண்டுகள்
இருபது ஆகிவிட்டன. ஆனாலென்ன? அன்று
முதல் தடவையாக அவளைக் கண்ட காட்சி அவன்
நினைவில் பசுமையாக நிலைத்துவிட்டது. அவள்
எழிலோ இன்னும் ஒளி குன்றாது சுடர் விடுகிறது. தன்
நாயகன் போற்றும் தனது அழகுப் பராமரிப்புக்கு
அவள் உபயோகிப்பது "'ஹேஸலின்' ஸ்னோ"...
தனியாகவோ, பவுடர் படியும் தளமாகவோ எழிலுக்கு
மெருகூட்டிப் பாதுகாக்கிறது "'ஹேஸலின்' ஸ்னோ".

# "'ஹேஸலின்' ஸ்னோ"

உங்களுக்கு எழிலூட்டுகிறது.

'ஹேஸலின்' வரிசையில் மேலும் கிடைப்பவை கோல்ட் கிரீம், டால்கம்



பர்ரோஸ் வெல்கம் & கம்பெனி
(இந்தியா) ப்ரைவேட் லிட்.
த. பெ. நெ. 290, பம்பாய்-1



BI-BW-18

கப்படும். இப்போது போலவே அப்போது நீ யாவும் உணரப் பெறுவாய்; நிரந்தரமாக உணரப் பெறுவாய்!''

பரமஹம்ஸருக்கு நரேந்திரரிடம் இருந்த பேர் அன்பைக் கண்டு நாம் அதிசயித்தோம். ஆனால் அதைவிட அதிகமான அன்பை மனித குலத்திடம் வைத்திருந்தார் குருமஹராஜ். மனித குலத்தின் மேன்மைக்காக நரேந்திரர் பாடுபட வேண்டும் என்பதற்காகவே அவருடைய அநுபூதியைத் தாம் பூட்டி வைத்துக் கொண்டார்!

நரேந்திரர் அத்வைத நிலையை எய்தினால் அதிலேயே கரைந்து போய்விடுவார் என்பது பரமஹம்ஸருக்குத் தெரிந்திருந்தது. ''தான் யார் என்று நரேந்தர் எப்போது உணர்கிறானோ, அதன் பின் அவனால் ஒரு கணம்கூட உடலில் இருக்க முடியாது. பூரணப் பொருளின் உணர்வை நரேனிடமிருந்து ஒரு திரையிட்டு மறைக்கும்படி நான் சர்வேசுவரியைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன். ஏனென்றால் அவனால் ஆக வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. என்றாலும் இந்தத் திரை மிகவும் மெல்லியதாக உள்ளது. அது எந்த நிமிஷமும் அறுந்துவிடும்போல் இருக்கிறது'' என்று பரமஹம்ஸர் கூறியிருக்கிறார்.

நரேந்திரரின் எல்லையற்ற ஆர்வத்துக்கு இரங்கியே அவர் சிறிது காலம் அத்வைத நிலையைத் துய்க்க அருள் புரிந்தார் பரமஹம்ஸர். எனினும், அவர் நிர்விகல்ப சமாதியிலேயே இருந்தால் உலகப் பணி புரிவது யார்? நிர்விகல்ப சமாதியில் இருந்த சப்த ரிஷியரில் ஒருவரை தெய்வக் குழந்தை தட்டி எழுப்பி அழைத்து வந்தது என்னுவது?

நினைத்த மாத்திரத்தில் தியானத்தில் ஆழ நரேனால் இயன்றது. ஒரு நாள் கிரீசபாபுவும் நரேந்திரரும் ஒரு விருக்ஷத்தின் அடியில் தியானத்துக்கு அமர்ந்தனர். சிறிது நேரத்தில் கொசுக்கள் ஏகமாகப் பிடுங்கத் தொடங்கியதால் கிரீசரால் தியானம் செய்ய முடியவில்லை. கண்களைத் திறந்தார். என்ன ஆச்சரியம்! நரேந்திரர் சற்றும் சலனமுறாமல் தியானத்தில் ஈடுபட்டிருந்தார்! கம்பளிப் போர்வை போர்த்திக் கொண்டாற்போல், அவருடைய உடம்பில் ஊசி முனை படக்கூட இடம் இல்லாமல், கொசுக்கள் உட்கார்ந்திருந்தன!

இதையெல்லாம் அறிந்துதான் பரமஹம்ஸரும் தாம் போய்விடலாம் என்று தீர்மானித்து விட்டார். 'நரேந்தர் தான் சீடர்களைப் பார்த்துக்கொள்ள இருக்கிறானே' என்று நிர்விசாரமானார்.

பேசவேமுடியாத நிலையை அடைந்த பரமஹம்ஸர், ''நரேன் மற்றவர்களுக்கு உபதேசிப்பான்'' என்று ஒரு காகிதத்தில் எழுதிக் காட்டினார்.

நரேந்திரர் தயங்கினார். ''நானா, உபதேசிக்கவா?'' என்று குழறினார்.

'சிஷ்யராக இருக்கும் தம்மைக் குருவாகப் பரமஹம்ஸர் பணிக்கிறார்!' — இதனை நரேந்திரரால் இரண்டு காரணங்களுக்காகத் தாங்க முடியவில்லை. விநயம் ஒரு காரணம். விசனம் இன்னொரு காரணம். தாம் குரு ஸ்தானத்தை ஏற்பதென்றால் நமது குருநாதர்?

நரேந்திரரின் ஆத்மவளர்ச்சிக்கு இறுதிப் பூச்சுக்கள் அளித்து வந்தார் குருமஹராஜ். வாய் திறக்கவொண்ணா வேதனையிலும் அவர் பிரதி மாலையும் இரண்டு மூன்று மணிகள் நரேந்திரருக்குப் பேச்சாலும், சைகையாலும், உணர்வாலும் உபதேசித்து வந்தார்.

ஆகஸ்ட் மாதம். தேதி பன்னிரண்டோ, பதின்மூன்றோ — நரேந்திரரைத் தம் அருகே அமர்த்திக்கொண்டார் பரமஹம்ஸர். அவரையே மிகவும் கூர்ந்து நோக்கியவாறு சமாதியில் அமிழ்ந்தார். மிகவும் சூக்ஷ்மமான ஏதோ ஒரு சக்தி — மின்சார அதிர்வு போன்ற ஏதோ ஒன்று தமது உடலில் புகுந்து வியாபிப்பதை உணர்ந்தார் நரேந்திரர். வெளி உலக நினைவுகள் விலகலாயின.

பிரேமசாகரமாகிய பரம்பொருளில் குரு — சிஷ்யர் இருவரும் கரைந்திருந்தனர். அப்போதே சிஷ்யருக்குள்ளும் குருநாதர் கரையலானார்.

நரேந்திரர் கண் விழித்த போது பரமஹம்ஸர் விம்மி அழுது கொண்டிருந்தார்.

''மஹாசய, ஏன் அழுகிறீர்கள்?'' என்று நெஞ்சு வெடிக்கும் குரலில் கேட்டார் நரேந்திரர்.

''நான் ஏதுமில்லாப் பக்கிரியாகி விட்டேன் நரேந்தர்! நான் சேமித்து வைத்திருந்ததையெல்லாம் இன்று உனக்கு அளித்து விட்டேன். இந்தச் சக்திகளால் நீ மகத்தான காரியங்களைச் செய்யப் போகிறாய். அதன் பின்பு — அதன் பின்பே நீ எங்கிருந்து வந்தாயோ அங்கு திரும்புவாய்'' என்று கூறி விம்மினார் பரமஹம்ஸர்.

சக்திகளை ஈந்து விட்டோமே என்று வருந்திய விம்மல் அல்ல அது. தியாகத்தின் ஆனந்த விம்மலேயாகும்!

ஸ்தூலப் பொருட்களை நாம் பரிமாறிக் கொள்வது போல சூக்ஷ்ம உணர்வுகளையும் மகான்களால் பிறர்க்கு அளிக்க முடியும். எவ்வளவோ பெரும் பாடுபட்டு ஸ்ரீ ராமகிருஷ்ணர் பெற்

றிருந்த சாதனைப் பலன்களை யெல்லாம் இன்று தமக்கெனப் பெற்று விட்டார் நரேந்திரர். அவற்றைத் தமக்கென வைத்துக் கொள்ளாமல் உலகுக்காகப் பயன்படுத்தியதே நரேந்திரர் விவேகானந்தரான வரலாறு.

ஆகஸ்டு பதினைலாம் தேதி.

குருநாதரைப் பரிபூரணமாக நரேந்திரர் நம்பிவிட வேண்டிய கதினம் அது.

அதற்காகவே போலும், நரேந்திரருடைய உள்ளத்தில் மீண்டும் பழைய சங்கை லேசாகத் தலை தூக்கியது.

'பகவான் உண்மையாகவே மனிதனாக அவதரிக்கிறானா? அப்படிப்பட்ட அவதாரம்தானா ஸ்ரீ குருமஹராஜ்? மரணவஸ்தைப்படும் இந்நிலையில் அவர் அப்படிச் சொல்லி விட்டால் போதும். அதனை அப்படியே ஒப்புக் கொண்டுவிட வேண்டியதுதான்' என்று நரேந்திரர் எண்ணலானார்.

நரேந்திரர் அவ்வாறு எண்ணிய உடனேயே அது குருவுக்குத் தெரிந்து விட்டது. 'எண்ணிய உடனேயே' என்று சொல்வது கூடத் தவறாக இருக்கலாம். அந்த சம்சய எண்ணத்தை நரேந்திரரிடம் தோற்று வித்தவரே அவர்தானோ என்னவோ?

நரேந்திரருக்கு ஐயம் எழுந்தது தான் தாமதம், குரு அவர் புறமாகத் தமது திருமுகத்தைத் திருப்பினார்.

''என் நரேன்! இன்னுமா உனக்கு நிச்சயப்பட வில்லை?'' என்றவர் தமது சக்தியை எல்லாம் திரட்டிக் கொண்டு உறுதியாக, தெளிவாகக் கூறினார்:

**''எவன் ராமனாகவும் கிருஷ்ணனாகவும் இருந்தானோ அவனே ராமகிருஷ்ணனாக இந்த உடம்பில் இருக்கிறான் — உன்னுடைய வேதாந்தப் பொருளில் அல்ல.''**

வேதாந்தத்தின்படி யாவருமே, யாதுமே பிரம்மமாகும். எனவே அவதாரங்கள் என்பதற்கு அங்கு அர்த்தமேயில்லை. மாயைக்கு உட்பட்ட விவகார உலகில் உள்ளவர்களை உய்விப்பதற்காக பிரம்மமே மாயையுடன் கூடி உலகில் தோன்றுவதைத்தான் அவதாரம் என்கிறோம். 'உன்னுடைய' வேதாந்தம் என்று சிறிதே ஏளனம் தொனிக்கப் பரமஹம்ஸர் கூறியது, வெறும் வேதாந்தத்தில் மட்டும் நம்பிக்கை கொண்டு பரம்பொருள் நிர்க்குணமானது என்று வாதிப்பவர்கள், அதன் கருணையைப் புரிந்து கொண்டு மக்களுக்காக அது அவதரிப்பதை உணர வேண்டும் என்பதனால்தான்.



''எதற்காக என்னைப் பத்தாண்டு வெளிநாடுகளில் சுற்றுப் பயணம் செய்யச் சொல்கிறீர்கள்?''
''அப்போதாவது இங்கே சில நல்ல படங்கள் உருவாகாதா என்பதற்காகத்தான்!''

சந்தேகித்தோமே என்று வேதனையும் வெட்கமும் அடைந்த நரேந்திரர் அதே சமயம் சந்தேக நிவிருத்தியில் நிம்மதியும் பெற்றார்.

அவதார தத்துவத்தை நரேந்திரர் புரிந்து கொண்டது பற்றி ஸ்வாமி நிகிலாநந்தர் கூறுவார்;

''தெய்விக மர்மங்களில் மிகப் பெரிய மர்மத்தை நரேந்திரர் கண்டு கொண்டார். உலகைக் காப்பதற்காக, அதனைப் படைத்த தந்தையே பிள்ளையாக வருவதைக் கண்டார். மனிதனைக் கடவுளாக்குவதற்காகக் கடவுள் மனிதனாகிறார் என்பதை நம்பலானார்.''

கண் முன்னே சிறிது சிறிதாகக் குருநாதர் மாண்டு கொண்டிருப்பதைத் தடுக்கமாட்டாமல் பார்த்துப் பார்த்துத் தங்கள் இயலாமையை ஓயாது உணர்ந்து பொருமிக் கொண்டிருந்தார்கள் சீடர்கள். வைத்தியர் வந்தார். அவர் மட்டும் என்ன செய்ய முடியும்? 'நோயாளியைக் குணப்படுத்தி விடுகிறேன் என்று வைத்தியர் கூறும்போது பகவான் சிரித்துக் கொள்கிறான்' என்று பரமஹம்ஸர் கூறியதை அறிந்திருந்தவர் போல் வைத்தியர் 'இனி மருந்துகளால் பயனில்லை' என்று கூறிவிட்டார்.

ஆகஸ்டு பதினைந்து!

அன்று குருநாதரின் உபாதைசொல்லி முடியாது. அந்தப் புனிதர் பட்ட பாட்டினைப் பன்னிப் பன்னி எழுதுவதும் ஏதோ அரக்கத்தனமான செயலாகத் தான் தோன்றுகிறது.

மாலை வந்தது. மூச்சு முட்டியது குருவுக்கு. சடேரென, உபாதையி லிருந்து உபாதியற்ற சமாதி நிலைக்கு நழுவினார் குருநாதர். இது வழக்கம் போன்ற சமாதியாகச் சீடர்களுக்குத் தோன்ற வில்லை. அவர்கள் கண்ணீர் சிந்தலானார்கள்.

நள்ளிரவு கழிந்த உடன் — அதாவது மேல்நாட்டு முறைப்படி ஆகஸ்டு பதினாறும் தேதி பிறந்த உடன் — பரமஹம்ஸர் கண் திறந்தார். சாமானிய மானுடர்கள் போலவே பேசினார். 'பசிக்கிறது' என்றார். சிறிதளவு கஞ்சி உட்கொண்டார். ஐந்து ஆறு தலையணைகளைச் சரியாதபடி சசி தாங்கி யிருக்க, அவற்றில் சாய்ந்தபடி நரேந்திரரிடம் மிக மெல்லிய குரலில் பேசிக்கொண்டேயிருந்தார். இறுதி விநாடி வரை ஏதேதோ சொல்லிக் கொண்டே யிருந்தார்.

அவர் என்னென்ன சொன்னார் என்பதை நாம் எப்படி அறிய முடியும்?

பரம்பொருளில் தாம் நிரந்தரமாகக் கரைந்து கொண்டிருப்பதைப் பற்றிச் சொன்னாரா?

அல்லது அது நிரந்தரமல்ல என்றும், மீண்டும் எப்போதெல்லாம் தேவைப்படுகிறதோ அப்போதெல்லாம் தாம் தோன்றப் போவதாகவும் சொன்னாரா?

நரேந்திரரைப் பொறுத்தவரை இந்தத் தோற்றத்தையும் நீக்கத்தையும் பற்றிக் கவலைப்படத் தேவை யில்லை என்றும், இது வரை அவருக்குப் புறத்தே இருந்த தாம் இனி அகத்தே உறையப் போவதாகச் சொன்னாரா?

நரேந்திரருடன் பேசுவதை முடித்துக் கொண்டார் பரமஹம்ஸர்.

''காளி, காளி, காளி'' என்று மும்முறை கூறினார்.

பல கோடி முறைகள் அந்தத் திருநாமத்தை ஜபித்திருந்த பக்தி உணர்வின் இறுக்கத்துடன் அமிருதமான தேவியைப் பற்றி அமிருத நினைவோடு அமிருத வார்த்தையைக் கூறினார் பரமஹம்ஸர்.

மிருத்யுவுக்கு அப்பாற்பட்ட அமிருதம் இதோ அவருக்கு மிக, மிக, மிகவும் நெருங்கி வந்து விட்டது.

கால ரூபியான காளி காலம் கடந்த பரம நிலையில் தன் அருமைப் பிள்ளையை அணைத்துக் கொண்டாள்.

அந்த அணைப்பில் புல்லரித்துப் போனது போல் ராமகிருஷ்ணருடைய திருமேனியில் 'குறு குறு' என்று ஒரு மயிர்க் கூச்சு ஓடியது. அவரது கருணைக் கண்கள் திருநாசியின் முனையை நோக்குவது போல் யோகியின் பார்வையாகக் குத்திட்டன. இன்சொல் பேசிப் பேசி எழிலேறியிருந்த அதரங்களில் மந்தஹாஸம் நெளிந்து, தீபத்தை ஏற்றி வைத்தாற்போல முக மண்டலம் முழுவதிலும் ஒளியைப் பரப்பியது.

ஒரு மணி இரண்டு நிமிஷம்.

இரண்டாக இருந்த அன்னையும் மகனும் ஒன்றானார்கள்.

மறு நாள் காலை, ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்ற அன்புத் தத்துவம் வாழ்ந்து வந்த ஆலயத்தைச் சந்தனப் பூச்சாலும், மலர்களாலும் அலங்கரித்தார்கள். காவி உடை அணிவித்தார்கள்.

ஊர்வலம் தொடங்கிற்று. ஊர்வலத்தில் கலந்து கொண்டவர்கள் பக்திப் பாடல்களில் ஊறிக் கொண்டிருந்தனர்.

அதோ கங்கா நதி.

அதற்கும் இப்பாலே ருத்ர பூமி.

சிஷ்யர்கள் எல்லோரும் அதற்குள் சிறிது போதேனும் அருளின் கருவூலத்தைச் சுமந்து இனம் தெரியாத ஆறுதலைப் பெற்றனர்.

சுமார் ஐம்பதாண்டுகள் யோகத்துக்கும் தியாகத்துக்கும், அருளுக்கும் அறிவுக்கும், பக்திக்கும் முக்திக்கும், எளிமைக்கும் எழிலுக்கும் உறைவிடமாக இருந்த பெட்டகத்தை இரண்டே மணிகளில் தன்னுள் கொண்டு புனிதம் பெற்றான் அக்கினி தேவன்.

அவன் அளித்த புண்ணியத் துகள்களை ஒரு பாண்டத்தில் நிரப்பினர் சிஷ்யர்கள்.

'ஜெய், ஸ்ரீ ராமகிருஷ்ண'

என்று விம்முகிற உள்ளங்களால் கோஷித்தபடி, அன்புகளின் நிலைக்களனாக இருந்த காசிப்பூர் தோட்ட மாளிகையில் பிரவேசித்தனர்.

'ஆகா, இந்த இல்லத்தைக் கோவிலாக்கிய தெய்வம் எங்கே?' என்று நெகிழ்ந்தார்கள்.

''அவர் எங்கும் போய் விடவில்லை'' என்றாள் தூய அன்னை சாரதை தெள்ளத் தெளிந்த தெய்வக் குரலில். ''நான் கங்கணங்களைக் களையலானேன். அவர் எதிரே தோன்றினார். 'களையாதே! நான் எங்கும் போய்விடவில்லை' என்று கூறினார்'' என்றாள் அமைதியுடன்.

(தொடரும்)

# பெண் வக்கீல்கள்



அனுசூயா

"ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக!" என்று படிக்கும்போது பெண் மணிகளுக்கு உற்சாகமாகத்தான் இருக்கும். ஆனால் பல விஷயங்களில் நடைமுறையில் அப்படி இருக்க முடியாதென்பது பலருக்குத் தெரியும். முழுதுமே அப்படி யிருப்பதைப் பலர் விரும்பவும் மாட்டார்கள்.

இப்போது ஒரே ஒரு ஊரில் மட்டும் ஆண்களும் பெண்களும் ஒரு விதத்தில் சமமாயிருக்கிறார்கள். அங்கே 1963ம் வருஷத்தில்,

44 குழந்தைகள் பிறந்தன. அவற்றில் 22 பிள்ளைகள்; 22 பெண்கள்.

270 பேர்கள் அந்த ஊரை விட்டு வெளியேறிச் சென்றார்கள். அவர்களுள் 135 பேர் ஆண்கள்; 135 பேர் பெண்மணிகள்.

144 பேர்கள் புதிதாக அந்த ஊருக்கு வந்தார்கள். அவர்களுள் 72 பேர் ஆண்கள்; 72 பேர் பெண்மணிகள்.

பன்னிரண்டு பேர்கள் ஊரை விட்டு மேல் உலகத்துக்கே போய்ச் சேர்ந்து விட்டார்கள். அதிலும் போட்டிதான். பரலோகத்துக்குச் சென்றது ஆறு ஆண்களும், ஆறு பெண்மணிகளும்.



திட்டம் போட்டு நடத்தினால்கூட இப்படி ஆண் பெண் கணக்குச் சமமாக வர முடியாது. இந்த அதிசயம் நடைபெற்றது. ஸ்வீடன் தேசத்திலுள்ள ஹாஸ்ஜோ என்ற சின்னஞ் சிறிய கிராமத்தில்.

ஆனால் இந்தச் சமத்துவக் கணக்கு நபர்களின் வாழ்க்கையைப் பாதிக்காத அம்சங்களைப் பற்றியது.

எத்தனை ஆண்களுக்கு உத்தியோகம் கிடைத்ததோ அத்தனை பெண்களுக்கும் உத்தியோகம் கிடைத்ததா? எத்தனை ஆண்களுக்குத் தலைவலி ஏற்பட்டதோ, அத்தனை பெண்களுக்கும் தலைவலி ஏற்பட்டதா? எத்தனை ஆண்களுக்குக் கலியாணமாயிற்றோ அத்தனை பெண்களுக்கும் கலியாணமாயிற்று? எத்தனை ஆண்கள் படித்தவர்களோ அத்தனை பெண்களும் படித்தவர்களா? இது போன்ற விஷயங்களைப் பற்றிச் சொல்லப்படவில்லை.

ஆண், பெண் படிப்பு, சமத்துவம் என்னும் போது சென்ற வாரம் தில்லியில் நடைபெற்ற அகில இந்திய ஸ்திரீகள் மகாநாட்டு நடவடிக்கைகள் ஞாபகத்துக்கு வருகின்றன. மகாநாட்டின் தலைவியான ஸ்ரீமதி மஜ்மா பீகம் பள்ளிக்கூடங்களில் எத்தனை பையன்கள் படிக்கிறார்களோ அத்தனை பெண்கள் படிக்கவில்லை என்று குறைப்பட்டார்.

சென்ற பன்னிரண்டு வருஷ காலத்தில் பள்ளிக் கூடங்களில் சுமார் 150 லட்சம் பையன்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். பெண்கள் தொகை 75 லட்சம்தானாம். காரணம் பெற்றோர்கள் பிள்ளைகளைப் படிக்க வைப்பதில் அதிக சிரத்தை காட்டுகிறார்களே யன்றிப் பெண்கள் படிப்பைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படுவதாகக் காணோம் என்கிறார். தமிழ் நாட்டைப் பற்றிய வரை பெற்றோர்கள் தங்கள் பெண்களைப் படிக்க வைப்பதில்தான் அளவுக்கு மீறிய உற்சாகம் காட்டுகிறார்கள் என்று சொல்வேன்.

பம்பாயில் சென்ற வாரம் இந்தியப் பெண் வக்கீல் சங்கத்தின் முதல் மகாநாட்டை ஸ்ரீமதி வயலட் ஆல்வா ஆரம்பித்து வைத்தார்.

இந்தியாவிலேயே மிகக் குறைந்த அங்கத்தினர்கள் உள்ள சங்கம் இந்தச் சங்கமாகத்தான் இருக்குமென்று நினைக்கிறேன். தேசம் முழுதிலுமாக மொத்தம் இருநூறு பெண் வக்கீல்கள் இருக்கக் கூடும். பல பெண்கள் சட்டப் பரீட்சை கொடுத்திருக்கலாம், ஆனால் எல்லாருமே வக்கீல் தொழிலில் ஈடுபட்டிருக்கவில்லை.

**தமிழ் நாட்டில் சுமார் பத்துப் பெண் வக்கீல்கள் இருந்தால் அதிகம்.**

இவர்களில் ஒருவர் ரெவினியூ இலாகா சம்பந்தமான வழக்குகளிலும், ஊர் சுற்றும் திரைப்படக் கம்பெனி சம்பந்தமான நடவடிக்கைகளிலும் ஈடுபட்டிருக்கிறார்.

இன்னொருவர் மோட்டார் பஸ் வண்டி சம்பந்தப்பட்ட விஷயங்களில் சிரத்தை கொண்டிருக்கிறார்.

ஒருவர் தொடுத்த வழக்குகள் விநோதமா யிருந்தன. அதனால் அந்தப் பெண் வக்கீல் எந்த வழக்குத் தொடுத்தாலும், அட்வொகேட் ஜெனரலது அனுமதி பெற்றே தொடுக்க வேண்டுமென்று நீதிபதிகள் உத்தரவிட்டிருக்கிறார்கள்.

கணவன் மனைவி இரண்டு பேருமே தொழில் புரியும் வக்கீல் ஜோடிகள் ஒன்று இரண்டு இருக்கின்றன. கணவன், மனைவி இரண்டு பேரும் எதிர் எதிர்க் கட்சிக்காக நீதிமன்றத்தில் ஆஜராகி ஒருவரை யொருவர் தாக்கிக் காரசாரமாக வாதம் புரியும் காட்சி மிக மிக ருசிகரமானதா யிருக்கும்.

ஸ்திரீகள் சொத்து பாத்தியதை சம்பந்தப்பட்ட வழக்குகள், கணவன்–மனைவி தகராறு வழக்குகள், ஜீவனாம்ச வழக்குகள் முதலியவற்றில் பெண் வக்கீல்கள் அதிகம் சிரத்தை கொள்வார்கள் என்று எதிர்பார்ப்பது சகஜம். ஆனால் அவர்கள் அப்படிச் செய்வதில்லை.

மொத்தத்தில் பெண் வக்கீல்கள் அந்தத் தொழிலில் முன்னேற்றமடைய வில்லை. அது மட்டுமல்ல, அவர்கள் சாமர்த்தியசாலிகள் என்றும் நிரூபித்துக் கொள்ள வில்லை.

இதற்கெல்லாம் விதிவிலக்காக விளங்குபவர் திருவனந்தபுரம் ஹைகோர்ட் நீதிபதியாக இருக்கும் ஸ்ரீமதி அன்னு மாஸ்கான் ஜான் அவர்கள்.

சட்டப் பரீட்சை கொடுக்க, கல்லூரிக்கு ஒரு நாள் முழுதும் போய்ப் படிக்க வேண்டியதில்லை. பரீட்சையில் விடைகளையும் கூடப் புத்தகங்களைப் பகிரங்கமாகப் பிரித்து வைத்துக் கொண்டே எழுதலாம். ஆகையால் பொழுது போக்குவதற்காகவே சட்டப் பரீட்சைக்குப் படித்து வைக்கிறார்களோ என்று எண்ணத் தோன்றுகிறது.

### கண்டுபிடியுங்கள்

❀ சென்ற வாரம் விவசாய இதழில் வாழைப் பழத்தைப் பற்றி எழுதியிருந்தேன். அதைப் படித்த பிறகு வாழைப் பழத்தைப் பற்றி எல்லாம் தெரிந்து கொண்டிருப்பது போல் ஒரு பிரமை ஏற்பட்டது அல்லவா? எங்கே, பின் வரும் பழம் ஒவ்வொன்றின் தோலிலும் எத்தனை பட்டைகள் இருக்கின்றன என்று உடனேயே சொல்லுங்கள்–பார்க்கலாம்!

மொந்தன், பூவன், மலைப்பழம், ரஸ்தாளி, பேயன், பச்சை வாழை, செவ்வாழை, பச்சை நாடன்.

### வீட்டுக் குறிப்புகள்

❀ வீட்டில் ரிப்ரிஜெரேட்டர் என்று ஒன்று இருக்கிறதே என்பதற்காக அதில் பழுத்த பழங்களை வைத்திருக்க வேண்டியதில்லை. அதிகக் குளுமை பழத்தைப் பழுப்பு நிறமாகும்படி செய்து விடும்.

❀ வாழைத் தண்டு சேர்த்துக் கொண்டு வந்தால் குடலில் தங்கும் கல், மண் முதலியன வெல்லாம் கரைந்து வயிறு சுத்தமாகி விடும் என்பது எல்லாருக்கும் தெரியும்.

ஆனால் அதனுடைய இன்னொரு முக்கிய உபயோகத்தைப் பற்றி முதன்முதலாக இப்போதுதான் படித்தேன். தென் ஆப்பிரிக்காவில் குழந்தைகளுக்குப் பால் கொடுத்து வரும் தாய்மார்கள், பால் அதிகம் உண்டாவதற்காக வாழைத்தண்டைச் சாப்பிட்டு வருகிறார்களாம். இது விஷயத்தை ஐந்து மாதக் குழந்தைகள் உள்ள இரண்டு பெண்களிடம் தெரிவித்தேன். அவர்கள் வாழைத் தண்டைச் சேர்த்துக் கொண்டு வந்தார்கள். நிறையப் பால், அதுவும் சீக்கிரத்திலேயே உண்டாகிறதென்று சொல்கிறார்கள். வாழைத்தண்டு உடம்புக்கு ஒத்துக் கொண்டால் அதாவது, அதனால் ஜலதோஷம், கபம் முதலியன ஏற்படாதிருந்தால் அதை ஆறு மாதக் குழந்தைகளுள்ள தாயார்கள் சேர்த்துக் கொள்ளலாம்.

### திக்குவாய்க்குப் பயிற்சி

சற்றுத் திக்கித் திக்கிப் பேசுபவர்களும், மேடையின் மீது பிரசங்கமாரி பொழிய விரும்புபவர்களும் பின்வரும் வாக்கியத்தைத் தினமும் பதின்மூன்று தரம் வேகமாகச் சொல்லிப் பயிற்சி செய்து வரலாம். பேச்சில் அபிவிருத்தி ஏற்படும்.

''கொழு கொழு வென்றிருக்கும் குழந்தையம்மா வழவழ வென்றிருக்கும் அழுகல் வாழைப் பழத்தின் மீது வழுக்கிக் கீழே விழுந்தாள்.''






அந்தக் கட்டடமே இடிந்து விடுவது போல் கூச்சலிட்டுக் கொண்டே தன் கைகால்களை உதறித் தன் பலமுழுவதையும் திரட்டி அந்த முரடனின் தோள்களிலும் முகத்திலும் சரமாரியாகக் குத்துகள் விட்டு அவனைப் பிடித்துத் தள்ள முயன்றாள் உமா. ஆனாலும் முரடன் விடவில்லை. மெல்லிய விகாரமான சிரிப்பு ஒன்றுதான் அவன் வாயிலிருந்து வீசியது!

அதே சமயம் —

மூடிக் கிடக்கும் அறைக் கதவுக்கு வெளியே, "அக்கா! அக்கா!" என்று வசந்தியின் குரல் கூவியபடி அறைக் கதவைப் படபடவென்று தட்டும் சத்தம் கேட்டது. கதவை உடைத்துக் கொண்டு வசந்தி எப்படியும் உதவிக்கு வந்து விடுவாள் என்றும் தோன்றியது.

ஆனால் அதற்குள் முரடன் என்ன செய்வானோ? அறைக்குள் யார் வந்தாலும் சரி, உலகமே திரளாக வந்தாலும் சரி, அந்தச் சித்தவெறியன் தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளாமல் விடவே மாட்டான் போல் இருந்தது. சை! என்ன ராட்சஸன்!

உமா அளவுகடந்த அருவருப்போடு வெடுக்கென்று அந்த ராட்சஸனின் கையில் கடித்தாள். அதனால் கைப் பிடி சற்றுத் தளர்ந்தது....

உடனே, தீயை மிதித்தவள் தன்னை மறந்து துள்ளிக் குதிப்பதுபோல், உமா துள்ளி விலகினாள். அப்போது அவள் காலை எதன் மீதோ மோதியதால், "ஆ" என்ற முனகலுடன் கீழ் நோக்கிச் சாய்ந்தாள். அதற்குள் முரடன் அவள் கீழே விழுந்து விடாதபடி தாவிப் பிடித்துக் கொண்டான்.

உமா அப்படியே மூர்ச்சித்து அந்த முரடனின் கைகளுக்குள்ளேயே கருண்டு விழுந்தாள்!

அறைக் கதவைப் படபடவென்று வசந்தி தன் கால்களால் எட்டி உதைத்

தும், கைகளால் குத்தித் தள்ளியும், திறக்க முயன்றவள் கடைசியாகத் தன் பலம் முழுவதையும் தோள்களில் திரட்டி, கதவின் உட்புறத் தாழ்ப்பாள் தெறித்து விழும்படி மோதித் தள்ளி கதவைப் படாரென்று உடைத்துக் கொண்டு, புயல் வேகத்தில் மின்னல்போல் அறைக்குள் பாய்ந்து வந்தாள். ''அக்கா! அக்கா!'' என்று அவள் தன் உயிரே கிழிவது போல் கூவியபடி அறைக்குள் சுற்றிச் சுழன்று தன் கையிலுள்ள பாட்ரி விளக்கின் வெளிச்சத்தைச் சுற்று முற்றும் வீசிப் பார்த்தாள்.




அந்த வெளிச்சத்தில், அவளுடைய அருமை அக்காவை ஓர் ஆண் உருவம் தாங்கிப் பிடித்தபடி நிற்பதைக் கண்டதும் திடுக்கிட்டாள். தன் கைவிளக்கின் வெளிச்சத்தை அந்த ஆண் உருவத்தின் முகத்தின் மீது வீசி உற்றுப் பார்த்து யாரென இனம் புரிந்து கொண்டதும், வசந்தி அதி வியப்புடன், ''ஆ! நீ...நீ'' என்று உதடுகள் படபடக்க வாய் திக்கிக் குழற அப்படியே ஒரு கணம் செயலற்று நின்றாள்.

அத்தியாயம் 29

## புத்துணர்வு

**வி**யப்பு சிறிது நீங்கியதும் அருவருப்பும் ஆக்ரோஷமும் பற்றிக்கொள்ளவே வசந்தி முன்னால் துள்ளி வந்து, ''நீ... நீ....நீங்களா?'' என்று கூவினாள்.

''ஆமாம்! நான்தான்! எல்லாம்வல்ல ஜகந்நாதன்தான்!'' என்று சிரித்துக் கொண்டே சொன்ன டாக்டர் ஜகந்நாதன், ''காணத் தகாத காட்சியைக் கண்டுவிட்டதாகக் குதிக்கிறாயா வசந்தி?'' என்று வெகு ரசனையோடு கேட்டார்.

''டாக்டர்!'' என்று அறைவது போல் கத்திய வசந்தி, ''நீங்கள் இப்படிச் செய்வீர்கள் என்று எதிர்பார்க்கவில்லை டாக்டர்!'' என்று பற்களைக் கடித்துக் கொண்டே படபடத்தாள்.

''நீ எதிர்பார்க்காவிட்டால் அறைக் கதவை உடைத்துக் கொண்டு இங்கே ஏன் ஆபத்பாந்தவி போல் வந்தாய்? உன் வீட்டுக்குப் போகாமல் அறைக்கு வெளியிலேயே இருட்டில் ஏன் ஒளிந்து கொண்டிருந்தாய்? என் யோக்கியதாம்சங்களை நினைத்துத்தானே?''

''உங்கள் யோக்கியதாம்சங்களைப் பற்றி உங்கள் வாயால் நீங்களே தெளிவாகச் சொல்லி யிருக்கிறீர்களே?'' என்று சீறிய வசந்தி தன் அக்காவின் நிலைமையைப் பார்த்து, ''அக்கா!.... அக்கா!'' என்று விம்மல் கருதி கூட்டக் குமுறியபடி உமாவை டாக்டர் ஜகந்நாதனின் பிடியிலிருந்து விடுவிக்க முயன்றாள்.

''உன் அக்காவைப் பற்றிக் கவலைப்படாதே, வசந்தி! இலேசான மூர்ச்சை தான்! இதோ தெளிந்துவிடும்!'' என்று ஜகந்நாதன் ஒரு விசித்திரப் புன்முறுவலுடன் சொல்லி விட்டு, ''உமா! உமா!'' என்று கூப்பிட்டபடி உமாவைப் பிடித்து உலுக்கினார்.

உமா மெல்லக் கண்களைத் திறந்தாள். தன் நிலையை உணர்ந்ததும் அவள் சட்டென்று ஜகந்நாதனிடமிருந்து விலகி நின்றாள்.

''என்ன உமா? என்னைச் சுடலையாண்டி என்று நினைத்துப் பயந்து விட்டாய் அல்லவா?'' என்று ஜகந்நாதன் சிரிப்புடன் கேட்டார்.



வெட்கத்தினால் உமா தலை குனிந்து கொண்டாள். அவளுடைய அமைதியான முகத்தில் நன்றியின் கனிவு போல் நளினமான ஒரு முறுவல் தவழ்ந்தது.

வசந்திக்கோ பொறுக்க முடியவில்லை. ''கடலையாண்டியாவது, கடலையாண்டியாவது?'' என்று குறுக்கிட்டுக் கத்திய அவள் தன் அக்காவைத் தன்பக்கம் வாரி யிழுத்துக் கொண்டு ஜகந்நாதனை ஆத்திரத்தோடு சுட்டிக்காட்டி, ''அக்கா! இந்த டாக்டர் ஒரு...ஒரு...மகா..'' என்று வசைமாரி பொழிவதற்காக மகா கடூரமான வார்த்தைகளைத் தேடித் தத்தளித்தாள்.

ஜகந்நாதனோ சிரித்துக் கொண்டே, ''என்னை மகா ரோக், மகா ராஸ்கல், பரம அயோக்கியன், நயவஞ்சகன் என்றெல்லாந்தானே சொல்லத் துடிக்கிறாய் வசந்தி? தாராளமாக எனக்கு அந்தப் பட்டங்களை யெல்லாம் வாரி வழங்கு! ஆனால் இடியட், முட்டாள் என்ற பட்டங்களை மட்டும் அள்ளி வழங்காதே!'' என்றார்.

உமா அவரைக் கனிவுடன் பார்த்து விட்டு, வசந்தியை நோக்கி, ''நம் டாக்டரை அப்படியெல்லாம் நினைக்காதே, வசந்தி!'' என்றாள்.

''என்னை நீ புரிந்து கொண்டிருக்கும் அளவு உன் தங்கையால் புரிந்து கொள்ள முடியாது உமா! அவள் குழந்தைதானே?'' என்று ஜகந்நாதன் சிரித்தார்.

''நான் ஒன்றும் குழந்தையில்லை! என் அக்காவை ஏமாற்றியதைப் போல் என்னை ஏமாற்ற முடியாது!'' என்று வசந்தி சீறினாள்.

''இல்லை, வசந்தி! உன்னைத்தான் ஏமாற்றினேன்! இப்போது உன் அக்காவைக் கவனித்துப் பார்! கால் சரியாகி விட்டதால் நன்றாக நிற்கிறாள். இனி நடப்பது மட்டுமல்ல, ஓட்டப் பந்தயத்தில் கூட முதற் பரிசு வாங்க முடியும்!'' என்று கிண்டலாகச் சொன்ன ஜகந்நாதன், ''நான் இப்படியெல்லாம் இருட்டில் பய முறுத்தியிராவிடில் உன் அக்கா படுக்கையிலிருந்து ஒரு மில்லி மீட்டர் அளவாவது அசைந்திருப்பாளா? தன்னை மறந்து துள்ளி எழுந்திருப்பாளா? கால் ஊனமாகாமல் ஒழுங்காய் இருக்குமா? இத்தகைய அற்புதம் நிகழ்வதற்காக டாக்டர்கள் சில சமயங்களில் இது போன்ற தந்திரமான முறைகளையும் கையாளத்தான் வேண்டியிருக்கிறது!'' என்றார்.

அப்போதுதான் அந்த அற்புதத்தை வசந்தி கவனித்தாள். உடனே ஜகந்நாதனின் சாதுரியத்தை நினைத்து உள்ளூற வியந்தாள்.

''என்ன வசந்தி? இப்போது என்னை மகா நிபுணன் என்று ஒப்புக் கொள்வாயா?'' என்று ஜகந்நாதன் மெல்லச் சிரித்தார்.

''இருந்தாலும் டாக்டர் நீங்கள் கையாண்ட முறை சரியல்ல!''

''எனக்குக் காரிய சித்திதான் பெரிதே தவிர, அதற்காகக் கையாளும் முறை அல்ல!''

''டாக்டர்! நல்ல காரியம் செய்வதானாலும் தர்மமான வழியையே பின்பற்ற வேண்டும்.''

''தர்மம், அதர்மம் என்பதெல்லாம் மனிதன் கண்டுபிடித்த வெறும் வார்த்தைகள்! இன்னும் சொல்லப் போனால் பலவான்களைக் கட்டுப்படுத்தப் பலவீனர்கள் தந்திரமாக உண்டாக்கிய ஆயுதங்கள்!'' என்று தூக்கியெறிந்து





• 1. இது வரை இருபது லட்சம் சைக்கிள்களைத் தயாரித்துள்ள டி. ஐ. சைக்கிள் ஸ்தாபனத்தினர் ஒவ்வொரு சர்வகலாசாலைக்கும் ஒரு சைக்கிளைப் பரிசளிக்க விருக்கிறார்கள். சென்னை ராஜ்யச் செஞ்சிலுவைச் சங்கத்துக்கும் ஒரு சைக்கிளை வழங்கினார்கள். 2. திருவல்லிக்கேணி இந்து ஹைஸ்கூல் பள்ளி நிர்வாகிகள் விவேகானந்தா நூற்றாண்டு விழாவை விமரிசையாகக் கொண்டாடினர். 3. மியூஸியம் தியேட்டரில் நாட்டிய மகா நாட்டைக் குமாரி வைஜயந்தி மாலா ஆரம்பித்து வைத்தார். 4. ரஷ்ய நாட்டு எழுத்தாளர்கள் சென்னைக்கு விஜயம் செய்த போது சென்னை எழுத்தாளர் சங்கத்தினர் அவர்களை வரவேற்றுக் கௌரவித்தனர். 5. தென் ஆப்பிரிக்கா டர்பன் நகரிலுள்ள இந்திய மாணவக் கல்லூரியில் திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் ஸ்ரீனிவாச சாஸ்திரியாரின் உருவச் சிலையைத் திறந்து வைத்தார்.

---

பேசிய ஜகந்நாதன், "வசந்தி! உண்மையில் சமயோசிதம்தான் சரியான வழி!" என்று அழுத்தம் திருத்தமாகக் கூறிவிட்டுத் தம் சட்டைப் பையிலிருந்து ஒரு விசிலை (ஊதுகுழலை) எடுத்துப் போலீஸ்காரன் ஊதுவது போல் ஊதினார்.

அதைத் தொடர்ந்து, அந்த அறையிலுள்ள மின்சார விளக்கும், நர்ஸிங் ஹோமிலுள்ள மற்ற விளக்குகளும் குபீரென்று எரிந்தன. ஆகவே, நடு இரவில் திடீரென விளக்குகளை எரியச் செய்தது, வைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து சித்த வெறியன் சுடலையாண்டி தப்பித்து விட்டதாக நர்ஸைக் கொண்டு தகவல் சொல்லச் சொன்னது முதலானவைகளெல்லாம், டாக்டர் ஜகந்நாதன் முன்கூட்டியே தந்திரமாகச் செய்த ஏற்பாடுகள்தான் என்பது உமாவுக்குத் தெளிவாக விளங்கி விட்டன. ஆனால் அவளுடைய பாட்டி?

உமா கலவரத்துடன் "பாட்டி! பாட்டி!" என்று கூப்பிட்டுக்கொண்டே சுற்றுமுற்றும் பார்த்தாள்.

அந்த அறையின் ஒரு மூலையில் ஞானகிப் பாட்டி இன்னும் அசையாமல் அப்படியே படுத்துக் கிடந்தாள்.

"உமா! நீ என்ன கத்திக் கூப்பிட்டாலும் உன் பாட்டி எழுந்து வர மாட்டாள்!"

"டாக்டர்..."

"பதறாதே உமா! தண்ணீரில் தூக்க மருந்தைக் கலந்து உன் பாட்டிக்குக் கொடுத்தேன். அதைக் கல்கத்தா காளி தீர்த்தம் என்று நான் வர்ணித்ததால் உன் பாட்டி பயபக்தியோடு கண்ணை மூடிக்கொண்டு அவ்வளவையும் குடித்துவிட்டாள்! இனி அவளாகவே அதிகாலையில் எழுந்திருந்து பேத்தியின் கால் சரியாகி விட்டதைப் பார்த்து அதிசயப்பட்டுக் காளிதீர்த்தத்தின் மகிமையை நினைத்துப் பதிகம் பாடட்டும்!" என்று ஜகந்நாதன் சிரித்தார்.

வசந்தி வியப்புக்கு மேல் வியப்படைந்து ஜகந்நாதனைக் கூர்ந்து பார்த்தாள். இப்போது அவளுடைய பார்வையில் ஒரு புது ரசனை மிளு

மினுத்தது: உள்ளத்தில் இனம் புரியாத ஒரு கிளுகிளுப்பும் உண்டாயிற்று.

அதை ஒரு பார்வையாலேயே புரிந்து கொண்டுவிட்ட ஜகந்நாதன் புன்முறுவலுடன், ''வசந்தி, இப்போது என்னைப் பற்றிய உன்னுடைய அபிப்பிராயம் மாறியிருக்கலாம். ஆனால் பிச்சுமணியின் கையிலுள்ள வீணையை நான் பிடுங்கி அதை உடைக்கப் போவது போல் பாவனை செய்ததும் நீ என்னைப் பற்றி என்ன நினைத்தாய்? சங்கீதத்தையே கொலை செய்யும் கொடூர வில்லன் என்றுதானே?'' என்று கேட்டார்.

''ஆமாம், டாக்டர்! ஆனால் அதன் உள் நோக்கம் இப்போதுதான் புரிந்தது. உங்கள் செய்கையைக் கண்டதும் வீணைப் பைத்தியமான என் அக்கா வீணையைக் காப்பாற்றுவதற்காகக் கட்டிலைவிட்டுப் பதறி ஓடி வருவாள் என்று எதிர்பார்த்தீர்கள்!''

''அது மட்டுமல்ல வசந்தி! பிச்சுமணி குரோதம் கொண்டு என்னோடு குஸ்திச் சண்டை போடுவான்! குறைந்தபட்சம் என்னுடைய ஒரு பல்லையாவது உடைப்பான்! அப்பொழுதாவது உமா பதறியடித்துக்கொண்டு எழுந்து ஓடிவருவாள் என்று எதிர்பார்த்தேன்!''

''அப்போது உங்கள் தந்திரம் பலிக்கவில்லை!''

''ஆமாம்! அவ்வளவு தூரத்துக்குத் தன்னடக்கமும் அமைதியும் வாய்ந்த பெண்தான் உன் அக்கா! அப்படிப்பட்டவளை எப்படித் திடுக்கிட்டு எழுந்து ஓடிவரச் செய்யலாம் என்று யோசித்தேன்! அதன் விளைவுதான் இருட்டடிப்பும்; இந்தப் பயமுறுத்தல் படலமும்!'' என்று தெளிவுரை வழங்கிய ஜகந்நாதன் தம் பிரகாசமான விழிகளை வசந்தியின் பகைமையான முகத்தின் மீதும், அவளுடைய குறும்பு விழிகளிலும் படர விட்டபடி, ''உங்களையெல்லாம் ஏதோ நாவலின் கதாபாத்திரங்கள் போல் கொஞ்சம் ஆட்டி வைத்து வேடிக்கை பார்த்துவிட்டேன் இல்லையா?'' என்று வெகு தமாஷாகக் கேட்டார்.

''ஸார்! உங்கள் நாவல்களை விட உங்கள் நடவடிக்கைகள்தான் அதி பயங்கரமானவையாக இருக்கின்றன. மர்ம நாவல்களில் வரும் மர்ம மனிதன் போன்றவர்தான் நீங்கள்!'' என்றாள் வசந்தி ஒரு சிரிப்புடன்.

''ஆமாம்! பெண்ணொருத்தி புரியாத புதிராக இருக்கும்வரையில்தான் சுவாரஸ்யப்படுகிறாள்! அது போன்ற ஒரு சுவாரஸ்யத்தைத்தான் நானும் போர்த்திக்கொண்டிருக்கிறேன்!'' என்றார் ஜகந்நாதன்.

உமா இடையில் எதுவும் பேசவில்லை. அமைதியே உருவான அவள் அடக்கமான இரண்டொரு வார்த்தைகளுக்கு மேல் அதிகமாகப் பேசவும் மாட்டாள். அவள் மௌனமாகவே அறையின் குறுக்கும் நெடுக்கும் நடந்து நடை பயின்று கொண்டிருந்தாள்.

''உமா! உனக்கு ஒரு சந்தேகமும் உண்டாகவில்லையா?'' என்று டாக்டர் ஜகந்நாதன் மெல்லக் கேட்டார்.

''இல்லை, டாக்டர்! சித்த வெறியன் கடலையாண்டியை நினைத்துத்தான் அதிகம் பயந்துவிட்டேன்!'' என்றாள் உமா.

''நீ அப்படிப் பயப்படுவாய் என்பது எனக்கு வெகு நன்றாகத் தெரியும்!'' என்று தற்பெருமையோடு சொன்ன ஜகந்நாதன், ''உமா! பயம்தான் மனிதனைச் செயல்படவோ சிதைபடவோ வைக்கிறது'' என்று ஒரு பொன்மொழியையும் உதிர்த்தார்.

உமா ஏதோ யோசித்து விட்டு, ''பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து அந்தச் சித்த வெறியன் தப்பி ஓடிவிட்டான் என்றும் இந்த நர்ஸிங் ஹோமுக்கு வரக் கூடும் என்றும், உங்கள் நர்ஸ் ஒருத்தி பதறியடித்துக்

# பனாமா

## ஸேப்டி ரேஸர் ப்ளேட்கள்

அதி சுத்தமான, வழவழப்பான க்ஷவரத்திற்கு



நாடெங்கணும் லட்சக்கணக்கான மக்கள் **பனாமாவை** உபயோகிக்கிறார்கள். அது வழவழப்பான, சுகமான க்ஷவரத்திற்கான சிறந்த ஸேப்டி ரேஸர் ப்ளேட். உங்கள் பணத்திற்கு அதிக மதிப்பைப் பெற **பனாமாவிற்கு** மாற்றிக் கொள்ளுங்கள்.

**பனாமா**

ஸேப்டி ரேஸர் ப்ளேட்




82/PNA-10 TAM



அனைவரும் அங்கீகரிக்கின்றனர்.
காரணம் நீங்கள் படைப்பது
இலேசான, சுவைமிக்க...

# ரெக்ஸ்
## ஜெல்லி



### ... செய்யவும் மிக எளிதானது!

ரெக்ஸ் ஜெல்லியிலுள்ள பழச்சுவையும், வாசனையும் உங்கள் குடும்பத்திலுள்ளோர் அனைவர்க்குமே பிரியமானது. அவர்களுக்காக ரெக்ஸ் ஜெல்லி செய்ய நீங்கள் விரும்புவது சகஜம்... சத்துச் செறிந்த அது செய்ய அத்தனை எளிதானது! வளரும் குழந்தைகளுக்கு ரெக்ஸ் ஜெல்லி சிறந்தது. சிசுக்களும், பிணியாறுபவர்களும்கூட ஜீரணித்துக் கொள்ளக்கூடியது!

கீழ்க்காணும் 6 வித நேர்த்தியான சுவைகளில் ஒன்றைக்கொண்டு ரெக்ஸ் ஜெல்லி தயாரிக்கலாம்: ராஸ்ப்பெர்ரி, ஸ்ட்ராபெர்ரி, பைன்ஆப்பிள், ஆரஞ்சு, லெமன், செர்ரி.

### நீங்கள் பின்பற்ற மூன்றுவழி எளிய தயாரிப்பு முறை:

1. ரெக்ஸ் ஜெல்லி படிகமணிகளை வெந்நீரில் கரைக்கவும். 2. பிறகு போதுமான அளவு குளிர்ந்த ஜலத்தை அத்துடன் சேர்த்து, ஒரு பைண்ட் (20 அவுன்ஸ்) அளவு கலவையாகச் செய்யவும். 3. அதை அச்சில் ஊற்றி, பனிக்கட்டிமேல் ஜெல்லியை உறைய வையுங்கள்.



**அடிக்கடி பரிமாறக்கூடிய அருமையான பொருள்
ரெக்ஸ் ஜெல்லி.**

**கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**

கொண்டு ஓடி வந்து சொன்னாளே?'' என்று கேட்டாள்.

''ஆமாம்; நான் சொல்லிக் கொடுத்தபடி அவள் தன் பாத்திரத்தைத் தத்ரூபமாக நடித்து விட்டாள். சினிமா உலகில் பிரபல நடிகையாக மாறிப் பல லட்சக்கணக்கில் பணம் சம்பாதித்துப் பலரைப் பைத்தியக்காரர்களாக்க வேண்டியவள் வெறும் நர்ஸாக நடமாடுகிறாள், பாவம்!''

''அப்படியானால் சுடலையாண்டி என்பதே உங்கள் கற்பனைப் பாத்திரம் தானா? என்னைப் பயமுறுத்த வேண்டும் என்பதற்காகவே அப்படி ஒருவனைப் புதிதாகச் சிருஷ்டித்தீர்களோ?''

''இல்லை; சுடலையாண்டி என்பது நிஜமான பாத்திரந்தான்! அவனைப் பற்றி நான் சொன்ன கதையும் உண்மையான வரலாறுதான்! ஆனால் அவன் என்றாவது ஒரு நாள் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து தப்பி ஓடினால் நேரே என் நர்ஸிங் ஹோமுக்கு வந்து என்னைப் பழி தீர்ப்பான்!'' என்று சிரித்துக் கொண்டே கூறிய ஜகந்நாதன், ''அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. என் வாழ்க்கை ஒரு டிராஜடி (சோக நாடகம்) ஆனால் அது சரித்திரப் பிரசித்தி அடையும் என்று கருதுவேன்!'' என்றார்.

உமா யோசனையில் ஆழ்ந்தாள்.. டாக்டர் தன் வாழ்க்கை 'டிராஜடி' யாக வேண்டுமென்று ஏன் விரும்புகிறார் என்று குழம்பினாள்.

வசந்தியோ உற்சாகமாய்த் துள்ளியவளாய், ''ஸார்! அக்காவுக்கு நன்றாக நடக்க வருகிறது! பொழுது விடிந்ததும் டிஸ்சார்ஜ் ஆகிவிடலாம், இல்லையா?'' என்று கேட்டாள்.

''இல்லை! இன்னும் ஒரு வாரம் நர்ஸிங் ஹோமிலேயே உமா இருக்கவேண்டும்!''

''ஏன் ஸார்? இந்த ரூமுக்கு வாடகை கொடுக்க வேறொரு 'பேஷண்ட்' (நோயாளி) அகப்படும் வரை என் அக்கா இங்கேயேதான் இருக்க வேண்டுமா?'' என்று வசந்தி கிண்டலாக ஒரு குறும்புச் சிரிப்புடன் கேட்டாள்.

''அது மட்டுமல்ல! கால் எலும்புகள் பலப்படுவதற்கு மருந்து முதலான சில்லறைச் சிகிச்சைகள் அளிக்க வேண்டும்! மேலும் உமா இங்கேயே ஒரு வாரம் வரை 'ரெஸ்ட்' எடுத்துக் கொள்வது நல்லது!'' என்று கூறிய ஜகந்நாதன் தமது கூர்மையான விழிகளால் வசந்தியை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ''உன் அக்காவைப் பார்ப்பதற்கு நீ தினசரி இங்கே வருவாய், இல்லையா?'' என்று வெகு அக்கறையோடு கேட்டார்.

''ஓ! காலை மாலை இரண்டு வேளையும் வருவேன். காலேஜுக்கு லீவ் நாளாய் இருந்தால் இங்கேயே இருந்து விடுவேன்! அதனால் நியூசென்ஸ் (தொந்தரவு) இல்லையே?''

''இல்லை, வசந்தி! நீ வந்தாலே நியூ–சென்ஸ் (புத்துணர்வு)தான்!'' என்று ஜகந்நாதன் விஷமமாகச் சிரித்தார்.

வசந்தியின் குறுகுறுவென்ற கருவிழிகள் மின்னலிட்டன. (தொடரும்)



## காப்டன் பட்டோடி

பட்டோடி நவாப்புக்குக் கிரிக்கெட் பரம்பரைச் சொத்து என்றால் அது மிகையாகாது. அவர் இங்கிலாந்து ஆட்டக்காரர்களும் கண்டு வியந்து பாராட்டும் 'கிளாசிக் பாட்ஸ்மன்'. மேற்கிந்தியத் தீவு கிரிக்கெட் பந்தயத்தில் இந்திய கோஷ்டி காப்டன் கண்டிராக்டர் அடிபட்டு ஆட முடியாமல் போன போது நவாப் பட்டோடியே அந்தத் தலைமைப் பதவியை ஏற்று நடத்தினார். சென்னையில் சென்ற தடவை வந்த எம். ஸி. ஸி. ஆட்டக்காரர்களைத் தோல்வியுறச் செய்ததற்கு அஸ்திவாரமிட்டவர் பட்டோடி நவாப் தான். அவர் எடுத்த 103 ரன்களையும் அவர் அடித்த ஸிக்ஸர்கள் இரண்டையும், பவுண்டரிகளையும் கிரிக்கெட் ரஸிகர்கள் நினைத்து நினைத்துப் போற்றியது நினைவுக்கு வருகிறது. கல்கத்தா, சென்னை இரண்டு டெஸ்ட்களிலும் வெற்றி பெறுவதற்குக் காரணமாக இருந்த பட்டோடியே இந்தத் தடவை இந்திய கோஷ்டிக்குக் காப்டனாக வந்திருப்பது வெற்றிப் பாதையில் முன்னேறுவதற்குச் சுபசூசகமாகும். பட்டோடியின் தலைமையில் இந்திய கோஷ்டி நன்றாக ஆடி நற்பெயர் சம்பாதிக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

படம்: 'ஹரிந்து'.

# புஷ்கரத்தில் பிரம்மா

## தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறான் என்பது யாவரும் ஒப்புக் கொள்ளும் உண்மை. இதை எளிதில் எல்லோரும் உணர்ந்துகொள்ள 'அவன் தூணிலும் இருக்கிறான்' என்று கூறுவர். இந்த இறைவன் பஞ்சபூதங்களின் ஒவ்வொரு அணுவிலும் இருக்கிறான் என்றும் கூறுவர். 'சாணிலும் உளன். ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட கோணிலும் உளன்' என்பதுதானே கவிச் சக்கரவர்த்தி கம்பன் சித்தாந்தம். 'நீருளான் தீயுளான் மிசையுளவர் மனத்துளான்' என்றெல்லாம் விளக்கிய அப்பரோ பின்னர் தன்னையே இருத்திக் கொண்டு,

இருநிலனாய், தீயாகி, நீரும் ஆகி
இயமானனும் எறியும்
காற்றும் ஆகி
அருநிலைய திங்களாய்
ஞாயிறாகி ஆகாசமாய்
அட்ட மூர்த்தியாகிப்
பெரு நலமும் குற்றமும்
பெண்ணும் ஆணும் பிறர் உருவும்
தம்முருவும் தாமேஆகி
நெருநிலையாய் இன்றாகி
நாளையாகி நிமிர்புன்
சடை அடிகள் நின்றவாறே.

என்று பாடித் தீர்த்து விடுகிறார். ஆம், அவனே நிலனாய், தீயாய், நீராய் நிற்கிறான் என்றே முடிவு கட்டுகிறார். இந்த உண்மையை அழுத்தமாக நமக்குக் காட்டுவதற்கு எழுந்த தலத்தில் ஒன்றுதான் புஷ்கரம். அங்கு பரந்தாமன் நீர் உருவில் இருக்கிறான் என்பது ஐதிகம். அதற்கேற்றாற் போல் அங்கு ஒரு பெரிய தடாகம். அத்தடாகமே பரந்தாமன்; அதில் மூழ்கி எழுபவர் வினை எல்லாம் கழிக்கப்படுகிறது. இறைவனோடு கலந்து ஆடும் இன்பம் பெற்று விட்டால் அதன்பின் வினைகள் நிற்பது ஏது?

புஷ்கரம் செல்ல முதலில் ஆஜ்மீர் செல்ல வேணும். ரயிலில் சென்றால் பம்பாயில் இருந்து புறப்பட்டு ரட்லம் ஜங்ஷனில் ரயில் மாற்றி அஜ்மீர் செல்ல வேணும். அஜ்மீர் பம்பாயிலிருந்து கிட்டத்தட்ட ஆயிரம் மைல் தூரத்திலிருக்கிறது. சித்தூர்கர் என்னும் ஸ்டேஷனிலிருந்து நூற்றிப் பதினேழு மைல் தூரம்தான். வட இந்திய யாத்திரையைக் காரிலேயே செய்பவர் என்றால் அகமதாபாத், உதயப்பூர், சித்தூர் பார்த்துவிட்டே செல்லலாம். ரோடுகள் மிகவும் நன்றாயிருக்கும் என்று சொல்லமுடியாது. புஷ்கரத்தில் தங்குவதற்கு வசதியான இடங்கள் கிடையா. ஆதலால் ஆஜ்மீரில் உள்ள ரீஜெண்ட் ஹோட்டலிலேயே தங்கிக் கொண்டு அங்கிருந்து ஏழு மைல் தூரத்திலே உள்ள புஷ்கரத்துக்குச் சென்று திரும்பி விடலாம். பஸ், டாக்ஸிகள் கிடைக்கும்.

ஆஜ்மீர் பிரசித்தி பெற்ற நகரம் ஆயிற்றே! ஆதலால் முதலில் ஆஜ்மீரையே ஒரு சுற்றுச் சுற்றலாம். ஆதியில் அஜயமேரு என்றே அந்த ஊர் பெயர் பெற்றிருக்கிறது. வெற்றியைத் தவிர வேறு அறியாத ஊராகக் கருதப்பட்டிருக்கிறது. அஜயபால சௌஹான் என்பவனால் ஏழாம் நூற்றாண்டிலே இந்த நகரம் நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது என்றாலும் பன்னிரண்டாம் நூற்றாண்டில் அஜயராஜன் என்ற மன்னவன் காலத்தில்தான் பிரசித்தி பெற்றிருக்கிறது. பல ராஜபுத்திர வீரர்கள் இருந்து அரசாண்டிருக்கிறார்கள் இங்கே. மொகலாய மன்னன் அக்பர் காலத்தில்தான் மேற்குப் பிராந்தியத்துக்கு ஒரு தலைமை ஸ்தானம் இந்த ஆஜ்மீருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேல்நாட்டிலிருந்து வந்த ஸர் தாமஸ் ரோ என்பவர் முதன் முதல் மொகலாய மன்னன் ஜஹாங்கீரைச் சந்தித்துத் தன் அரசன் கொடுத்த நருபப்பத்திரத்தை 1616ல் இங்குதான் கொடுத்திருக்கிறான். ஷாஜஹானுடைய மூத்த மகன் தாராஷிகோ பிறந்ததும் இந்த நகரத்தில்தான். ஷாஜஹான் இங்கு அடிக்கடி வந்து தங்கியிருக்கிறான். இங்குள்ள ஆன சாகர் ஏரிக்கரையிலே ஓர் அழகிய மாளிகையும் கட்டியிருக்கிறான். எண்ணூறு அடி உயர்ந்திருக்கும் தாராகர் மலையடிவாரத்திலே இந் நகரம் இருக்கிறது. இங்குள்ள கோட்டையைத் தாராகர் கோட்டை என்றே அழைக்கிறார்கள். இந்த மலையடிவாரத்திலே தான் அடாயீ தின்கா ஜோம்ப்ரா என்ற அழகிய கட்டடம் இருக்கிறது. இதன் வேலைப்பாடு மிகவும் சிறந்தது. இரண்டரை நாட்களிலேயே கட்டி முடித்த கட்டடம் என்கின்றனர். இங்குள்ள முஸ்லிம் பகுதிகளில் சிறப்பானது தர்கா க்வாஜா

ரங்க்ஜீ கோயில் வாயில்



சாஹிப் என்பதுதான். நகரத்தின் மத்தியில் தான் அக்பர் கோட்டை யிருக்கிறது. அதன் வாயில் எண்பத்து நாலு அடி உயரமும் நாற்பத்து மூன்று அடி அகலமும் என்றால் அந்தக் கோட்டையின் காம்பீர்யத்தைக் கொஞ்சம் கற்பனை செய்து பார்த்துக் கொள்ளலாம்.

இந்த ஆஜ்மீருக்கு வடமேற்கே ஏழு மைல் தூரத்தில்தான் புஷ்கரம் இருக்கிறது. செல்லும் பாதை ஆன சாகர் ஏரிக்கரை வழியாகவும் நாராகர் மலை வழியாகவும்தான் செல்கிறது. புஷ்கரத்தின் சிறப்பு அங்குள்ள தீர்த்தத்தில்தான். அகலிகை கதை நமக்குத் தெரியும். கௌதமன் மனைவியான அகலிகையைக் கண்டு மோகித்து இந்திரன் அவளை வஞ்சித்துக் கற்பழித்து விடுகிறான். விஷயம் தெரிந்ததும் கௌதம முனிவர் அகலிகையைக் கல்லாகப் போகும்படியும், இந்திரன் ஆயிரம் கண் பெறவும் சபிக்கிறார். இச்சாபம் தீரப் பிரம்மனை நோக்கி இந்திரன் தவம் செய்கிறான். பிரமனும் கங்கை நதியையே ஒரு குளத்தில் பெருகச் செய்து அதில் தன் கமண்டலத்திலிருந்த தண்ணீரையும் தெளித்துப் புனிதமாக்குகிறான். அந்தத் தீர்த்தமே புஷ்கரம். இதில் நீராடியே இந்திரன் தன் பாவங்களைத் தீர்த்துக் கொள்கிறான். இந்தத் தீர்த்தம் புனிதமாகக் கருதப்படுகிறது. இங்கு பரந்தாமன் தீர்த்தரூபியாகவே எழுந்தருளி யிருக்கிறான் என்பது ஐதீகம். இதனையே தீர்த்த ராஜா என்கின்றனர்.

புஷ்கரத்தில் உள்ள பிரதான கோயில் பிரம்மாவின் கோயில்தான். அது ஊருக்கு மேற்கே ஒரு சிறு குன்றின் மேல் இருக்கிறது. ஆதியில் கட்டப்பட்ட கோயில் ஔரங்கசீப்பால் இடிக்கப்பட்டுத் திரும்பவும் 1809ல் கோகுல் சந்த் பரேக் என்பவரால் புதிதாகக் கட்டப்பட்டிருக்கிறது. இந்திய நாட்டில் பிரம்மாவுக்கு என்று தனியான கோயில்கள் அதிகம் இல்லை. ஆதலால் இங்குள்ள பிரம்மா கோயில் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. இங்கு நான்கு முகத்தோடு கூடிய பிரம்மாவின் சிலை ஒன்று இருக்கிறது. ஒருபுறம் சாவித்திரியும் ஒரு புறம் காயத்ரியும் இருக்கின்றனர். கோயில் கோபுரத்துக்கு அருகில் சனகாதி முனிவர்களது சிலைகள் இருக்கின்றன. புஷ்கரத்தில் யக்ஞ குண்டத்துக்கு அருகே அகத்தியர் ஆசிரமம் இருக்கிறது. இந்த இடத்தில்தான் ராமலக்ஷ்மணர்கள் தீர்த்தமாடினார்கள் என்கின்றனர். அகலிகை சாப விமோசனமும் இங்குதான் நிகழ்ந்திருக்க வேண்டும்

புஷ்கரத்தில் எல்லோருமே நல்ல சைவர்கள். லால் உண்பவர்கள் அல்ல. அந்த நகரத்தின் எல்லையிலே எந்த மிருகத்தையும் கொல்லுதல் கூடாது என்பது இன்றும் அங்கு அனுஷ்டிக்கப்படும் சட்டம். இன்னும் தேவகுருவாகிய பிருஹஸ்பதி பிரம்மாவை நோக்கித் தவம் புரிந்து தனக்குப் புஷ்கரத்தில் கிரகாதிபத்யம் வேண்டி யிருக்கிறார். அந்த வரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் குரு வந்து பன்னிரண்டு ராசிகளிலும் தங்கும் போது ஒரு பெரிய மேளாவே நடக்கிறது. அங்கே இதுதான் புஷ்கரத்தில் பன்னிரண்டு வருஷத்துக்கு ஒரு தரம் நிகழும் பெரிய விழா — ஆம் கும்பகோணத்தில் நடக்கும் மகாமகத்தைப் போல.



ரங்க்ஜி கோயில் - உள்புறம்

இத்தலத்தில் சிவனுக்கும் ஒரு கோயில் இருக்கிறது. அங்குள்ள சிவபெருமானை அடமடேசுவரர் என்று அழைக்கின்றனர். இன்னும் இங்கு விஷ்ணுவுக்கு மூன்று கோயில்கள் இருக்கின்றன. அவைகளில் இரண்டு புராதனமானவை; ஒன்று சமீப காலத்தில் கட்டப்பட்டது. புராதன கோயில் ஒன்றில் ரங்கநாதர் இருக்கிறார். இன்னொன்றில் வராக மூர்த்தி மூலவராக நிற்கிறார். ஸ்ரீ தேவியும் பூதேவியும் பக்கத்தில் இருக்கின்றனர். இங்குள்ள வராகர் தமிழ் நாட்டில் ஸ்ரீமுஷ்ணத்தில் உள்ளவர் போல் கம்பீரமான தோற்றம் உடையவர் அல்ல. பழைய கோயிலை ஔரங்கசீப் இடித்து மட்டமாக்கி யிருக்கிறான். பின்னர் நான்கு சிகரங்களோடு கூடிய கோயிலை ராஜா பிரதாபனின் பாட்டனார் மகாராஜா சாங்கா கட்டி முடித்தார் என்று வரலாறு கூறுகிறது.

இத்தலத்தில் தமிழர்களாகிய நமக்கு ஒரு அதிசயம் காத்து நிற்கிறது. ஒரு கோயில் வாயிலுள் நுழைந்து உள் சென்றதும் நான் அதிசயித்து விட்டேன். காரணம் அக்கோயில் ராஜகோபுரம் நம் தமிழ் நாட்டுக் கோபுரம் போலவே இருந்ததுதான். விசாரித்தால் மணிராம் என்று ஒரு சேட் இருந்திருக்கிறார். அவர் தீராத நோய்வாய்ப்பட்டிருந்த போது தமிழ் நாட்டு வைஷ்ணவப் பெரியார் ஒருவர் அவரது நோயைத் தீர்த்திருக்கிறார். சேட்ஜியோ தம் செல்வம் முழுவதையுமே அவரது காலடியில் கொட்டி யிருக்கிறார். ஆனால் அவர் அதில் ஒரு பைசாகூடத் தமக்கென எடாது. அந்த சேட்ஜியைக்கொண்டே ரங்கநாதருக்கு ஒரு கோயில் கட்டச் சொல்லி யிருக்கிறார். தமிழ்நாட்டிலிருந்து சிற்பிகள் சென்றிருக்கிறார்கள். கோயில் முப்பத்திரண்டு லட்சம் ரூபாயில் 1919ல் கட்டி முடிந்திருக்கிறது. அகோபிலத்திலிருந்தே லட்சுமி நரசிம்மனை எழப் பண்ணிக் கொண்டு வந்து இங்கு இருத்தி யிருக்கிறார்கள். கருவறையிலே மூல மூர்த்தியாக ஸ்ரீ வைகுண்ட நாதர் பூதேவி ஸ்ரீதேவி சமேதராக இருந்த திருக்கோலத்தில் இருக்கிறார். இன்னும் ராமர், தேசிகர், உடையவர், மகாலக்ஷ்மி, ஆண்டாள் எல்லாரும் தனித்தனி சந்நிதியிலே இருக்கிறார்கள். இன்னும் சொல்லப் போனால் புஷ்கரத்தில் உள்ள கோயில்களில் இந்தக் கோயிலில்தான் பக்தர் கூட்டம் அதிகம். இதனை அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் எல்லாம் ரங்க்ஜி கோயில் என்றுதான் அழைக்கிறார்கள்.

கலை வளர்க்கும் கோயில்கள்

# சரபோஜி கல்லூரி

**த**ஞ்சையிலிருந்து திருச்சி பக்கமாகப் போகும் சாலை காலை வேளையில் கலகலப்பாக இருந்தது. கும்பல் கும்பலாகச் சைக்கிள் ஓட்டிகள் சாலை முழுவதையும் ஆக்கிரமித்த வாறு எங்கோ போய்க் கொண்டிருந்தார்கள்.

ஏதாவது தொழிலாளர் ஊர்வலமோ என்று கூட எண்ணத் தோன்றியது. ஆனால் எந்த விதமான கொடிப் பிடிப்போ கோஷ முழக்கமோ இல்லை. எல்லாருமே ஏறத்தாழச் சம வயதுள்ள இளைஞர்களாகவும் இருந்தார்கள். முகத்தில் நிலவியிருந்த மகிழ்ச்சியும் பேச்சில் ஒலித்த கலகலப்பும், அவர்களைத் தொழிலாளர் வர்க்கத்துடன் இணைக்க விடாமல் செய்தன.

அப்புறம்தான் அவர்கள் அத்தனை பேரும் கல்வித் தொழில் புரியும் கல்லூரி மாணவர்கள் என்றும் ஊரை விட்டு வெளியே சற்றுத் தள்ளி யிருக்கும் தங்கள் ராஜா சரபோஜி கல்லூரிக்குச் சென்று வரச் சைக்கிள்களை



கல்லூரிக் கட்டிடமும், முதல்வர் திரு டி. முருகையன் அவர்களும்

உபயோகப்படுத்துபவர்கள் என்றும் தெரிய வந்தன. சுமார் முந்நூறு மாணவர்களின் சௌகரியத்துக்காக, டி. வி. எஸ். ஸ்தாபனத்தார் காலை மாலை வேளைகளில் தங்கள் பிரயாணிகள் பஸ்களில் சிலவற்றை டவுனிலிருந்து கல்லூரி வரை போய்த் திரும்ப விசேஷ ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தஞ்சை திருச்சி மார்க்கங்களில் வரும் இதர பிரயாணி பஸ்களும் மாணவர்கள் மாணவிகள் போக்குவரத்துக்கு உதவி செய்கின்றன. சுமார் முந்நூறு மாணவர்கள் தங்க வசதியுள்ள ஹாஸ்டல் கல்லூரி வட்டத்துக்குப் பக்கத்திலேயே இருக்கிறது.

கல்லூரி முதல்வராகக் காப்டன் டி. முருகையன் அவர்கள் பணியாற்றி வருகிறார். திரு முருகையன் தம் கல்லூரி மாணவர்களுக்குப் பௌதிக சாஸ்திரம் போதிப்பவர்.

ஏறத்தாழத் தொள்ளாயிரம் பேர்கள் இந்தக் கல்லூரியில் படிக்கிறார்கள். இவர்களில் சுமார் நூறு பேர் பெண்கள். புகுமுக வகுப்பைத் தவிர பி. ஏ. பொருளாதார வகுப்பும் பி. எஸ். ஸிக்காக பௌதிகம், ரசாயனம், உயிரியல், கணிதம், வகுப்புகளும் இருக்கின்றன. பூமி சாஸ்திரத்துக்கான அனுமதியைச் சர்வகலாசாலையினர் ஏற்கனவே அளித்திருந்தும், போதுமான நிதி வசதி இல்லாததின் காரணமாக அந்த வகுப்புக்களின் ஆரம்பத்தைக் கொஞ்ச காலத்துக்கு ஒத்திப் போட்டிருக்கிறார்கள்.

1955ம் ஆண்டு ஜூன் மாதத்தில் தஞ்சை சங்கீத மகாலில் நூற்றிருபது மாணவர்களுடன் செயல்படத் தொடங்கிய இந்தக் கல்லூரியை அபிமானத்துடன் 'மக்கள் கல்லூரி' என்று குறிப்பிடுவதில் பொருள் இருக்கிறது. இந்தக் கல்லூரியே தஞ்சை மாவட்டப் பொது மக்களின் முயற்சியின் விளைவால் தோன்றியதுதான்.

வருடம் ஒன்றுக்கு ஏறத்தாழ ஐயாயிரம் மாணவர்கள் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்து வெளிவரும் தஞ்சை மாவட்டத்தில், ஒரே ஒரு கல்லூரிதான் கும்பகோணத்தில் இருந்தது. கும்பகோணம் கல்லூரியில் இடம் கிடைக்காமல், வெளி மாவட்டங்களுக்குப் போய்ப் படிக்க முடியாமல் , உயர் கல்வி ஆசையைத் துறக்க வேண்டிய நிலை எத்தனையோ மாணவர்களுக்கு ஏற்பட்டது. இந்த நிலையைப் போக்க ஒரு வழி காண 1954ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில், மதிப்பும், பொறுப்பும் செல்வாக்கும் படைத்த சில பிரமுகர்களைக் கொண்ட குழு ஒன்று நிறுவப்பட்டது. 'தஞ்சைக் கல்லூரிக் கமிட்டி' என்ற பெயரும் அந்தக் குழுவுக்குச் சூட்டப்பட்டது. ஜில்லா போர்டின் சத்திர நிர்வாக வருமானத்திலிருந்து ஐந்து லட்சம் ரூபாய்களை மூலதன

மாகப் பெற்றுத் தஞ்சையில் கல்லூரி தொடங்கவும் திட்டமிடப்பட்டது. பல தர்மங்களுக்குக் காரண கர்த்தாவாக இருந்த தஞ்சையின் முன்னாள் மன்னர் சரபோஜியின் பெயரையே அந்தக் கல்லூரிக்கு இடவும் ஏற்பாடாயிற்று. கல்லூரிக் கட்டடங்கள் எழுப்பத் தஞ்சை ரோட்டரி கிளப் மனமுவந்து நூற்றி ஐம்பத்தாறு ஏக்கரா விஸ்தீரணமுள்ள நிலப் பரப்பைக் கல்வி வளர்ச்சிக்குத் தங்கள் காணிக்கையாக அளித்தது. 1956ம் ஆண்டிலேயே சங்கீத மகாலில் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கல்லூரி தன் சொந்தக் கட்டடத்துக்கு இடம் மாறியது.

எல்லாவற்றையுமே தயாரித்திருக்கிறார்கள் இந்தக் கல்லூரி மாணவர்கள். அவைகளை மக்கள் கண்டு ரசித்து வாங்கிப் போகும் வாய்ப்பு உடனடியாகத் தஞ்சைக் கலைப் பொருட்காட்சி மூலம் ஏற்படவிருக்கிறது.

கலைப் பொருட்காட்சியும் கல்லூரி வளர்ச்சியும் தஞ்சையில் ஒன்றுடன் ஒன்று பிணைந்து நிற்கின்றன என்று கல்லூரியின் சரித்திரத்திலிருந்து தெரிகிறது. 1954, 55ம் ஆண்டுகளில் நடத்தப்பட்ட பொருட்காட்சிகள் மூலம் முறையே கிடைத்த நாற்பதினாயிரமும் அறுபதினாயிரமும், கல்லூரிக் கமிட்டியினரிடம் கிடைக்கக் கண்டுதான், அவர்கள் அதை ஆதாரமாக வைத்துச் சத்திர நிர்வாகத்திலிருந்து பெரும் தொகை பெற்றார்கள்.



பௌதிகப் பரிசோதனையில் ஈடுபட்டிருக்கும் மாணவர்கள். >

கைத்தொழிலில் ஈடுபட்ட மாணவர்களின் கைத்திறன்.

இப்போது கல்லூரியை மேலும் விஸ்தரிக்கப் பாட போதனைக் கூடங்களை அதிகரித்து மாணவர்களுக்கு வசதி செய்து கொடுக்க ஏழு ஆண்டு இடைவெளிக்குப் பிறகு மீண்டும் இந்த ஆண்டு ஜனவரி மாதம் இருபதாம் தேதியிலிருந்து பிப்ரவரி மாதம் இருபதாம் தேதி வரை பொருட்காட்சியைத் தஞ்சை அரண்மனைக் கட்டடத்தில் நடத்தவிருக்கிறார்கள். கல்லூரியின் பொருளாதார வளர்ச்சியும் அதை அடிப்படையாகக் கொண்டு வளரக் காத்திருக்கும் வருங்கால மாணவர் சமூகத்தின் எதிர்காலமும்தான் இந்தப் பொருட்காட்சிக்கு ஏற்பாடு செய்திருப்போர்களின் லட்சியம்.

கல்லூரிப் பிரதான கட்டடங்களுக்குத் துணையாகப் பரிசோதனைச் சாலைப் பகுதிகளும் முந்நூறு மாணவர்கள் தங்கிப் படிப்பதற்கான வசதியுள்ள ஹாஸ்டல் கட்டடமும் திறந்த வெளி அரங்கமும் நாளடைவில் எழுந்திருக்கின்றன. ஊரின் எல்லைக்கு அப்பால் தனித்து இருப்பதால் அமைதியான சூழ்நிலை எப்போதுமே நிலவுகிறது.

மாணவர்களை உற்சாகமான கைத்தொழிலில் ஓய்வு நேரங்களில் ஈடுபட வைக்கும் திட்டம், சர்வகலாசாலை மான்யக் கமிஷன் உதவியால் இந்தக் கல்லூரியிலும் அமுலுக்கு வந்திருக்கிறது. தச்சு வேலை, போட்டோப் பிடித்தல், ரேடியோ இணைப்பு, பொம்மைகள் தயாரித்தல் என்ற நாலு பிரிவுகளில் மாணவர்கள் தங்கள் கவனத்தைச் செலுத்தலாம்.

தஞ்சாவூர் தலையாட்டிப் பொம்மைக்குப் பெயர் போனது. பழைய காகிதங்களை அரைத்துக் கலவை செய்து தயாரிக்கப்படுவது. இந்த முறையில், தலையாட்டிப் பொம்மைகளைத் தவிர மற்ற நவீன ரகங்களில், சிவபார்வதி, புத்தர், நாட்டியப் பொம்மை

எந்தத் துறையிலும், தயங்காமல் முன் வந்து, தம் உதவியையும் உற்சாகத்தையும் தாராளமாக அளிக்கும் தஞ்சைக் கலெக்டர் திரு வேத நாராயணனே இந்தப் பொருட்காட்சிக் குழுவுக்குத் தலைவராக இருக்கும் போது தஞ்சை தனவந்தர்களும் பொதுமக்களும் ஒரு தடவைக்கு ஒன்பது தடவையாகப் பொருட்காட்சி நிகழ்ச்சிகளுக்கு உற்றார் உறவினருடன் வந்து பலவேறு கலை நிகழ்ச்சிகளைக் கண்டு களித்துத் தங்கள் ஊர்க் கல்லூரியின் பொருளாதாரத்தை உயர்த்தாமலா இருந்து விடப் போகிறார்கள்?

முகுந்தன் கம்பெனியில் பத்துப் பங்குகள் வாங்கின நாள் முதலாகவே சங்கரனுக்கு ஒரே ஆத்திரம். கம்பெனிக்குப் பணம் அனுப்பிவிட்டு, பங்குகள் வரும் வரும் என்று ஒரு மாதம் காத்திருந்தான். பேச்சு மூச்சுக் காணோம். காரசாரமாக ஒரு கடிதம் எழுதித் தபாலில் போட்டான். பதில் இல்லை. ரிஜிஸ்தர் தபாலில் மற்றொரு கடிதம் போட்டான். இரண்டு நாட்களில் பங்குகள் அனுப்பப்படும் என்று பதில் வந்தது. அதன் பின் இரண்டு வாரங்கள் கழித்துப் பங்குகள் வந்து சேர்ந்தன.

பங்குகள் வந்த நாள் முதலாகச் சங்கரன் முகுந்தன் கம்பெனிப் பங்குகள் என்ன விலையில் விற்கின்றன என்று தினம் விடாமல் பத்திரிகையில் கவனித்து வந்தான். அதிலும் அவனுக்கு ஏமாற்றமே. ஒரு நாளாவது முகுந்தன் கம்பெனிப் பங்குகள் பற்றி ஒரு வரி கூடச் செய்தி வரவில்லை.

"நாம் பங்கு வாங்கின முகுந்தன் கம்பெனி 'போண்டி' ஆகிவிட்டதா என்ன?" என்று நினைத்தான். ஆனால் விசாரித்துப் பார்த்ததில் அந்தக் கம்பெனி இன்னும் நடப்பதாகவே தெரிந்தது. கம்பெனி நிறைய லாபத்தில் நடப்பதாகக் கூடச் சொன்னார்கள். ஆனால் கம்பெனி ஆரம்பித்து ஐந்து வருஷங்களாகியும், ஒரு வருஷம் கூட லாபம் காட்டவில்லை, ஒரு செல்லாக் காசு கூடப் பங்குதாரர்களுக்கு 'டிவிடெண்டு' தரவில்லை. கம்பெனியின் மானேஜிங் ஏஜண்டுகள் ஏதோ கொள்ளையடித்துச் சாப்பிடுகிறார்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்த ரகசியமாயிற்று. பங்கு மார்க்கெட்டிலோ முகுந்தன் கம்பெனிப் பங்குகளின் விலை அசல் விலைக்குப் பாதிக்கும் குறைவாய்ப் போய் விட்டன.

"சேச்சே, ரொம்ப மோசமாய்ப் போய் விட்டது. அடுத்த பங்குதாரர்கள் கூட்டத்தில் ஏதாவது செய்தாக வேண்டும்! விடக் கூடாது. சிலபேர்கள் ஊரைக் கொள்ளையடிப்பது, நாம் சும்மா இருப்பதா?" என்று முடிவு செய்து கொண்டான் சங்கரன்.

சண்டை என்று வந்தால் சங்கரன் இளைப் பட்டவன் அல்ல. ஆனது ஆகட்டும் என்று ஒரு கை பார்த்துவிடுவான்.

அவனுடைய தீர்மானத்துக்குத் தகுந்தாற்போல், அடுத்த மாதம் முகுந்தன் கம்பெனியிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. கம்பெனியின் ஐந்தாவது ஆண்டறிக்கையை வைத்தனுப்பி, பங்குதாரர்களின் பொதுக் கூட்டம் ஒரு குறித்த தேதியில் குறித்த நேரத்தில் நடக்குமென்றும், மானேஜிங் ஏஜண்டுகளான கபாலிராம் சகோதரர்களை மீண்டும் ஐந்தாண்டுகளுக்கு மானேஜிங் ஏஜண்டுகளாக நியமிப்பதென்ற ஒரே தீர்மானம் கூட்டத்தில் கொண்டு வரப்படுமென்றும் தெரிவித்திருந்தார்கள்.

அவனுக்குச் சரியான சந்தர்ப்பம் கிடைத்தது என்று சங்கரன் மகிழ்ந்தான். பங்குதாரர்கள் பொதுக் கூட்டத்துக்குப் போய் மானேஜிங் ஏஜண்டு சகோதரர்களை ஒரு கலக்குக் கலக்கிவிடவேண்டுமென்றும் வேறு யாரையாவது மானேஜிங் ஏஜண்டுகளாகக் கொண்டு வர வேண்டும் என்றும் தீர்மானித்தான். கபாலிராம் சகோதரர்களின்



ஜன்மப் பகைவர்களான துரைத்தம்பித் தாஸ் சகோதரர்கள் இந்தப் பதவியை ஏற்கச் சித்தமாக இருப்பதாகவும் அவனுடைய ஆதரவு அவர்களுக்கு வேண்டும் என்றும் ஒரு கோரிக்கை சில தினங்கள் கழித்துத் தபாலில் வந்தபோது அவனுடைய மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. கபாலிராம் சகோதரர்களை ஒழித்துத் தீர்த்தாயிற்று என்று பூரித்தான் அவன்.

சங்கரன் வெறும் புள்ளாணயமல்ல. எடுத்த காரியத்தைத் திட்டமிட்டுச் செய்பவன். முகுந்தன் கம்பெனியின் ஐந்தாண்டு அறிக்கைகளையும் விடாமல் படித்தான். மானேஜிங் ஏஜண்டுகள் செய்வதாக அளித்த வாக்குகளையெல்லாம் கோடிட்டுக் குறித்தான். அவர்கள் நிறைவேற்றாத வாக்குகளை எல்லாம் ஒன்று, இரண்டு, மூன்று என்று கணக்கெடுத்தான். கம்பெனியின் வரவு-செலவு என்ன, லாபம் என்ன, மானேஜிங் ஏஜண்டுகள் எடுத்துக் கொண்டது என்ன,

பங்குதாரர்களுக்குக் கிடைத்திருக்க வேண்டிய 'டிவிடெண்டு' என்ன என்றெல்லாம் அக்கக்காய் விரல் நுனியில் விவரம் வைத்திருந்தான். அவன் வசம் இருந்த புள்ளி விவரங்கள் போதும், கபனீகரம் சகோதரர்களை ஒரே மூச்சில் ஒழித்துக் கட்ட.

ஆனால் சங்கரனுக்கு ஒரு சந்தேகம். கபனீகரம் சகோதரர்கள் பங்குதாரர்களைக் கையாளுவதில் நிபுணர்களாயிற்றே! அவன் பேசினால்தானே அவர்களது குட்டு வெளிப்படும்? கூட்டத்தில் அவன் பேசாமலே தந்திரமாய் அவனைத் தடுத்து விட்டார்களானால் என்ன செய்வது? அவன் பேசுவதற்குச் சந்தர்ப்பமே அளிக்காமல் ஏமாற்றி விட்டார்களானால்? "இதில் ஏமாந்துவிடக் கூடாது. எடுத்த எடுப்பிலேயே தாக்குதலை ஆரம்பித்து, மற்றப் பங்குதாரர்களின் சந்தேகத்தைக் கிளப்பி விட்டுவிட வேண்டும். 'எல்லாம் சரிவர நடக்கிறது' என்று அவர்கள்




ரா.அ.பத்மநாபன்

நினைக்காமல், ஏதோ, சூது வாது நடக்கிறது என்று செய்து விட்டால் போதும், ஜயம்தான் என்று சங்கரன் தீர்மானித்தான்.

கூட்டம் நடக்க வேண்டிய நாள் வரவர அவன் மனோ திடம் அதிகரித்தது. கூட்டம் நடக்க வேண்டிய தினம் அவன் அதிகாலையிலேயே எழுந்தான். படுக்கையில் இருப்புக் கொள்ளவில்லை. தினசரிப் பத்திரிகையை எடுத்துப் பார்த்தான். முகுந்தன் கம்பெனிப் பங்குதாரர் பொதுக் கூட்டத்தை நினைவுபடுத்தி ஒரு சிறு விளம்பரம் இருந்தது. கூட்டம் சரியாக நாலு மணிக்கு என்று குறித்திருந்ததை அவன் மனப் பாடம் செய்து கொண்டான்.

பஸ்ஸை நம்பிப் போனால் முன்னே பின்னே இருக்குமென்று டாக்ஸி வைத்துக்கொண்டு போனான். கட்டட வாசலில் ஒரே கும்பல். பலபேர் வருவதும் போவதுமாயிருந்தார்கள். வேகமாய் மாடிப் படி ஏறினான். ஹாலில் கூட்டம் நிறைந்திருந்தது. தான் வந்தது நேரமாகி விட்டதோ என்று கடிகாரத்தைப் பார்த்தான். நாலு அடிக்க ஒரு நிமிஷம் இருந்தது. அடுத்த நிமிஷம், யாரோ ஒருவர் எல்லாரும் அடுத்த ஹாலுக்குப் போய்ச் சிற்றுண்டி அருந்துமாறு கேட்டுக் கொண்டார்.

'கம்பெனியின் நிர்வாகம் கெட்ட கேட்டுக்குப் பங்குதாரர்களுக்குச் சிற்றுண்டி வேறு!' சங்கரன் அடுத்த ஹாலில் சிற்றுண்டி சாப்பிட உட்கார்ந்தான்.

அவனது மேஜையில் சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்த மற்றவர்கள் யாரும் அவனுக்குத் தெரிந்தவர்கள் அல்ல. அவர்களுடைய பேச்சும் வேறு ஏதேதோ விஷயங்களைப் பற்றி இருந்ததே தவிர, கம்பெனியின் தலைவிதியை நிர்ணயிக்கப்போகும் பிரச்னையில் அவர்கள் அக்கறைப்பட்டதாகக் காணோம். 'இப்படித்தான் ராமன் ஆண்டாலென்ன, ராவணன் ஆண்டாலென்ன என்று இருந்து கம்பெனி குட்டிச்சுவராகும்படி விட்டு விடுகிறார்கள்! இது மாதிரி ஆட்டு மந்தைகள் மோசக்காரருக்கு வசதியானவை. இந்த ஆடுகளைத் தட்டி எழுப்ப வேண்டுமே!' என்று பொருமினான்.

சிற்றுண்டி என்பது பெயரளவில்தான் சிற்றுண்டியே தவிர, உண்மையில் பேருண்டியாகவே இருந்தது. இத்திப்பில் ஆரம்பித்து முந்திரிப்பருப்பு, மிக்சர், கார சோமாஸ், காப்பி அல்லது டீ வரை வந்ததோடு நில்லாமல் ஐஸ்கிரீமையும் சேர்த்து, அது முடிந்த பின் மலைவாழைப்பழமும் வெற்றிலை பாக்குப் பீடாவும் தந்தார்கள். சிற்றுண்டி முடியும் போது மணி சுமார் நாலு ஐம்பதாகிவிட்டது.

அப்புறம் எல்லாரும் முதல் ஹாலுக்குப் போனார்கள். அங்கே மேடை மேல் ஒரு மேஜையைச் சுற்றிச் சிலர் உட்கார்ந்திருந்தார்கள். "பார்ப்பதற்கு இவ்வளவு சாதுவாக இருக்கிறார்களே இவர்கள்தானா இந்தக் கபனீகரம் சகோதரர்கள்! நன்றாக வேஷம் போட்டு நடிக்கக் கற்றவர்கள் போலிருக்கிறது!" என்று சங்கரன் தனக்குள் சொல்லிக் கொண்டான். அவர்களுடைய ஜாலத்தில் ஏமாந்து விடக் கூடாது என்று மறுபடியும் உறுதி செய்து கொண்டான்.

அறையில் கைதட்டல். "அன்பர்களே, இன்று எங்கள் அழைப்புக்கு இணங்கி, நீங்கள் இவ்வளவு பேர் இங்கே கூடியிருப்பதற்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்" என்று ஒரு குரல் ஆரம்பித்தது.

'முதலிலேயே புகுந்து சந்தேகத்தைக் கிளப்ப வேண்டும்! உஷார்!' என்று சங்கரனின் அந்தராத்மா அவனைத் தூண்டியது.

மேஜையில் பேசிக் கொண்டிருந்த குரல் சொல்லிற்று: "இன்று நம் முன் நிற்கும் பிரச்னை மிக எளிதானது. அதை ஒரே விநாடியில் நீங்கள் தீர்த்து விடலாம். நான் சொல்வதை நம்புங்கள். நீங்கள் அனைவரும் நாங்கள் கொண்டுவரும் தீர்மானத்தை ஆதரித்தால்..."

"நாங்கள் ஆதரிப்போம் என்று என்ன நிச்சயம்! நீங்களாக எங்கள் ஆதரவு இருப்பதாக எண்ணிக் கொண்டுவிட வேண்டாம்!" என்று சங்கரன் கத்தினான்.





**நீதிபதி:** நீ பிக்பாக்கெட் அடிக்க வில்லை என்று சத்தியமாகச் சொல்லு கிறாய் அல்லவா?

**குற்றவாளி:** ஆமாங்க...!

---

பிரசங்கி திகைத்துப் போனார். கூட்டத் தினர் அனைவரும் திரும்பிப் பார்த்தார்கள். ''ஒரு நிமிஷம் நான் சொல்வதைக் கேளுங்கள். கூட்டத் தலைவன் என்ற முறையில் என் வார்த்தைக்குச் செவி சாயுங்கள்...'' என்று அவர் மேலே பேச முற்பட்டதுதான் தாமதம், சங்கரன் இடைமறித்து, ''ஒரு நிமிஷம்கூடக் கேட்க முடியாது. சகோதரர்களே, நாம் ஐந்து வருடங்களாக ஏமாந்ததெல்லாம் போதாதா? இன்னும் இவர்களை நம்புவதா? முருந்தன் கம்பெனியில் அக்கறை கொண்ட ஒவ்வொருவரும் நான் சொல்வதை ஏற் பீர்கள் என்று நம்புகிறேன்'' என்றான்.

கூட்டத் தலைவர் சிரித்தார்.

''சிரித்துச் சமாளிக்கப் பார்க்கிறீர்களோ! அது முடியாது!'' என்று கத்தினான் சங்கரன்.

தலைவர்: ஐயா, மன்னிக்க வேண்டும். கூட்டத் தலைவன் என்ற முறையில் சொல் கிறேன். நீங்கள் குறிப்பிடும் கம்பெனி...

சங்கரன்: உங்கள் நயமான மோசடி எனக்கு வேண்டாம்! நீங்கள் இனியும் என்னை ஏமாற்ற முடியாது. நான் பேசியே தீருவேன். இந்தக் கம்பெனியில் உள்ள நிர்வாகப் பித்தலாட்டங்களை வெளிப் படுத்தியே தீருவேன்!

தலைவர்: வெளிப்படுத்துங்கள். ஆனால்...

சங்கரன்: ஆனாலென்ன ஆனால்! வீண் பசப்பு வார்த்தைகளை நாங்கள் நம்பின காலம் மலையேறி விட்டது. நாங்கள் போட் டுள்ள பணம் வெறும் ஓட்டாஞ்சல்லியா? பணமய்யா, பணம்!

தலைவர்: ஒப்புக் கொள்கிறேன். ஆனால் இன்றைய கூட்டம் நீங்கள் குறிப்பிட்டபடி...

சங்கரன்: உங்கள் சாகசம் தெரியும்! இன்றைய கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் நான் பேசப் போவதாக இல்லை என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளப் பார்க் கிறீர்களோ! 'நிகழ்ச்சி நிரலில் இல்லை!' — சரியான சாக்குப் போக்குத்தான். இந்தத் திருட்டுத்தனம் பலிக்காது. நான் ஆபீஸ் ஃபைல்களிலும், பொதுக்கூட்ட நடவடிக்கை களிலும் ஊறி உப்புப் பூத்துப் போனவன்!''

தலைவர்: அதை நான் மறுக்கவில்லை. உங்களைப் போன்ற அநுபவசாலிகள்....

சங்கரன்: பார்த்தீர்களா, மிரட்டலில் ஆள் மசிய மாட்டான் என்று தெரிந்ததும் 'ஐஸ்' பண்ணப் பார்க்கிறீர்களோ!

தலைவர்: ஐயா! நீங்கள் என்ன இப்படிப் பேசிக் கொண்டே போகிறீர்கள்! கூட்டத் துக்குத் தலைவன் நான். நான் சொல்லும் ஒரு வார்த்தையைக் கேளாமல் இப்படிக் கூச்சல் போடுகிறீர்களே!

சங்கரன்: கூச்சலிடுகிறேனா, உங்கள் வண்டவாளங்களையெல்லாம் வெளிப்படுத் தாமல் நான் வாயை மூடப்போவதில்லை.

தலைவர்: தயவு செய்து உட்காருங்கள். நான் சொல்வதைக் கேளுங்கள்!

சங்கரன்: ஆகா, உட்காருகிறேன். இன்று நீங்கள் கூட்டம் நடத்தும் விதத்தைப் பார்த்து விடுகிறேன்.

தலைவர்: ஐயா, தயவுசெய்து சும்மா இருங்கள். நீங்கள் இங்கே வந்ததே தப்பு...

சங்கரன்: பார்த்தீர்களா, என்னைச் சட்ட நுணுக்கப் பிரச்னையால் வெளியேற்ற முயல் கிறீர்கள்! ஏன் நான் இங்கே வரக் கூடாதாம்? நான் உரிமை பெற்ற பங்குதாரர் இல்லையா?

தலைவர்: நீங்கள் இந்தக் கூட்டத்துக்கு வந்ததே தப்பு. இது.....

சங்கரன்: சொல்லுங்கள், ஏதாவது சொல் லுங்கள்!

தலைவர்: இவ்வளவு நேரம் நீங்கள் கார சாரமாய் வெளுத்து வாங்கினீர்களே அந்த முருந்தன் கம்பெனியின் கூட்டமல்ல இது.

சங்கரன்: என்ன, என்ன!

தலைவர்: முருந்தன் கம்பெனியின் அலுவ லகம் மேல்மாடியிலிருக்கிறது. இது உள்ளூர் பசு சம்ரட்சணை சங்க ஆண்டு விழா. அவ்வளவுதான். அதைச் சொல்ல வந்தால், நீங்கள் விட்டால்தானே!

சங்கரன் உடல் குன்றிப் போனான். வெட் கம் பிடுங்கித் தின்ன, ஒரே பாய்ச்சலில் ஹாலை விட்டு வெளியே ஓடினான். நிலை குலைந்த மனத்தைச் சரிப்படுத்திக் கொண்டு மேல் மாடிக்குப் போய் முருந்தன் கம்பெனி அலுவலகத்தில் நுழைந்தபோது, அங்கே கர கோஷமும் ஆரவாரமுமாக இருந்தது. ''அன்பர்களே, சென்ற ஐந்து ஆண்டுகளாகச் சிறப்பான தொண்டு புரிந்துள்ள கபளீகரம் சகோதரர்களையே அடுத்த ஐந்தாண்டுக்கும் மானேஜிங் ஏஜெண்டுகளாக நீங்கள் தேர்ந் தெடுத்ததற்கு நன்றி. கூட்டம் இத்துடன் முடிவடைகிறது. நீங்கள் அனைவரும் இங் கேயே இருந்து, கபளீகரம் சகோதரர்கள் தங்கள் சொந்தச் செலவில் பங்குதாரர் களுக்கு அளிக்கும் தேநீர் விருந்தில் கலந்து கொள்ள வேண்டுகிறேன்'' என்று ஒரு குரல் கேட்டது.

வெகு வேகமாய் வந்த படி வழியே கீழே ஓடினான் சங்கரன்!

# திருவொற்றியூர் வெள்ளி

கு. அழகிரிசாமி

திருவொற்றியூர் சதுரானன பண்டிதர் மடத்தில் அன்று சில விசேஷ அலங்காரங்கள் செய்யப்பட்டன. வாசலில் மாவிலைத் தோரணங்கள் கட்டினார்கள். இருபுறமும் வாழை மரங்களை வெட்டிக் கொண்டு வந்து நிறுத்தினார்கள். மடத்தின் முற்றத்தில் சிறு பந்தலும் போடப்பட்டு உள்ளே விதானங்கள் கட்டி, இளநீர், தென்னம்பாளைகள் முதலியனவும் தொங்க விடப்பட்டன. அன்றையதினம் ஒரு பண்டிகை நாளும் அல்ல. ஏன் இந்த விசேஷ அலங்காரங்கள் என்று ஊர் ஜனங்கள் திகைத்தார்கள். மடத்தில் கல்வி பயிலும் ஒரு மாணுக்கனை விசாரித்தபோது தான் விஷயம் இன்னது என்று தெரிந்தது.

அன்று கவிச் சக்கரவர்த்தி கம்பர் அந்த மடத்துக்கு விஜயம் செய்வதை முன்னிட்டுத்தான் மடத்தில் இத்தனை ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. வாரங்கலில் காகதீய மன்னன் பிரதாப ருத்திரன் ஆஸ்தானத்தில் பல நாட்கள் தங்கியிருந்த கவிச்சக்கரவர்த்தி கம்பர் தமிழ் நாட்டுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார். தமிழகத்தில் பிரவேசித்த பின் கூவம் ஆற்றின் கரையிலுள்ள தியாக சமுத்திரம் கிராமவாசிகள் அவருடைய வருகையை எப்படியோ கேள்விப்பட்டு, ஊரோடு திரண்டு சென்று கவிஞர் பெருமானை எதிர் கொண்டழைத்தார்கள். தங்கள் கிராமத்துக்கு எழுந்தருள வேண்டும் என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்க வழி விலகி, அங்கே சென்ற கம்பர் மறு நாளே திருவொற்றியூருக்கு வந்தார்.

திருவொற்றியூர் மடத்து வாசலில் கம்பரின் சிவிகை வந்து நிற்கும்போது சரியான நண்பகல். அந்த வெய்யிலிலும் பெருங்கூட்டம் அவரை வரவேற்கக் காத்திருந்தது. ஊர்வாசிகளின் வரவேற்புக்கும் சந்தோஷ ஆரவாரத்துக்கும் பிறகு, சதுரானன பண்டிதர் அவரை மடத்துக்குள் அழைத்துச் சென்றார்.

பண்டிதரின் மாணவர்கள் ஆளுக்கு ஒரு பணிவிடையைச் செய்து கம்பரை உபசரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களோடு ஒரு பெண்ணும் பணி செய்வதைக் கம்பர் கவனித்தார். 'மடத்தில் இப்படி ஒரு பெண்ணுக்கு என்ன வேலை?' என்று கூட அவர் யோசித்தார்.

பெண்ணுக்கு இருபத்தைந்து வயது இருக்ககூடும். அழகியாக இருந்தாள். அதிலும் எதிர்பாராத ஓரிடத்திலே தோற்றம் அளித்த அழகு பன்மடங்கு விகசித்தது. அதோடு மட்டுமல்ல; அவள் எவ்வித ஆபரணங்களும் அணியாமல், உயர்ந்த பட்டையும் உடுத்தாமல் துவைத்து உலர்த்திய ஒரு பழைய வெண்ணிறப் புடவையோடு தபஸ்வினியைப் போல் எளிமைக் கோலம் பூண்டிருந்தது. அழகை வரம்பின்றி வளரவும் வியாபிக்கவும் செய்து விட்டது.

கம்பர் இரண்டாவது முறை அவளைக் கவனிக்கும்போது அவள் தன் இரு கரங்களிலும் அவருடைய பாதுகைகளைச் சுமந்துகொண்டு முற்றத்தின் ஒரு மூலையை நோக்கிச் சென்றாள். ஏதோ ஓர் ஓரத்தில் பிடித்துத் தூக்காமல், கைநிறைய மலர்களைக் கொண்டு செல்வது போல் அவ்வளவு பயபக்தியுடன் அவள் அவற்றை எடுத்துச் சென்றாள்.



ஒரு மூலையில் போய் உட்கார்ந்த பெண் தன் மடியில் அந்த இரண்டு பாதுகைகளையும் வைத்துக் கொண்டாள். ஒன்றை முதலில் எடுத்துத் தனது முந்தானையால் துடைத்தாள். இதைப் பார்த்த கம்பர், சதுரானன பண்டிதரைப் பார்த்து, ''அந்தப் பெண்ணை இங்கே கூப்பிடுங்கள். என் கால் செருப்புகளை அவள் மடியில் வைத்துத் துடைக்கிறாள். இதைக் காண எனக்குப் பிடிக்கவில்லை'' என்று படபடப்போடு சொன்னார். பண்டிதரும் ஒரு மாணாக்கனைத் திரும்பிப் பார்த்து, முகக் குறிப்பால் கட்டளையிட்டார்.

''அம்மா! யார் நீ? என்ன வேலை செய்கிறாய்? செருப்புகளை இப்படி வைத்துவிடு. இப்படி வேலைகளை நீயாகவும் செய்யாதே; யார் சொன்னாலும் செய்யாதே'' என்று கூறினார் கம்பர்.

அவள் ஒன்றும் பேசாமல் தலை குனிந்த வண்ணமே ஒரு படிக்கட்டின் மேல் பிரதிஷ்டை செய்வது போலச் செருப்புகள் இரண்டையும் வைத்து விட்டு, அடுத்த கணமே அங்கே நிற்கத் துணிவின்றி வேகமாக ஒதுங்கிச் சென்று மடத்தின் ஒரு பகுதிக்குள் சென்று மறைந்தாள்.

''பண்டிதரவர்களே! யார் இந்தப் பெண்? எந்த மடத்திலும் ஓர் இளம் மங்கை வந்து கல்வி பயிலுவதாக நான் கேள்விப்பட்டது கூட இல்லை. இங்கே இவளைக் காண்பது எனக்கு ஒரு புதுமையாகவே இருக்கிறது'' என்றார் கம்பர்.

''எங்களுக்கும் இது ஒரு புதுமைதான் கவியரசே! எங்கிருந்தோ வந்தாள். மடத்தில் அடைக்கலம் தர வேண்டும் என்று கும்பிட்டாள். நான் மறுக்கவில்லை. ஏறக்குறைய ஓர் ஆண்டும் ஆகிவிட்டது. இங்கே நாங்கள் சொல்லாமலே எல்லாப் பணிகளையும் செய்கிறாள். நாங்கள் கொடுக்கும் உணவை உண்டு, அதோ தென்புறத்தில் உள்ள காளி கோவில் பூசாரியின் வீட்டில் போய் அவள் வீட்டுப் பெண்களோடு இரவில் தங்கிவிட்டு வருகிறாள். அவள் எந்த ஊர் என்பதும் எங்களுக்குத் தெரியாது. அவளுடைய பெயரையும் அவள் சொல்ல மறுத்து விட்டாள்.''

அப்போது கம்பருக்குப் பகலுணவு படைப்பதற்காக மாணாக்கர்கள் கைகட்டிய வண்ணம் வந்து ஓர் ஓரத்தில் நின்றார்கள்.



''கவிச் சக்கரவர்த்தி அவர்களே! எழுந்து முதலில் அமுது செய்ய வேண்டும்'' என்று பண்டிதர் பணிவோடு கூறிக் கம்பரை அழைத்துச் சென்றார்.

மடத்தின் வேறொரு பகுதியில் மாணாக்கர்கள் கவிச் சக்கரவர்த்திக்கு உணவு பரிமாறினார்கள். அப்போது, கம்பரின் பிரயாணத்தையும், காகதீய மன்னனையும், ஆந்திர நாட்டின் வளப்பங்களையும் பற்றிப் பண்டிதர் ஏதேதோ கேட்டுக் கொண்டிருந்தார். சாப்பாடு முடிந்து அவர்கள் வெளியே வரும்போது, வேறொரு வாசல் வழியாகச் சாப்பாட்டு இடத்தை நோக்கி அந்த இளம் பெண் சென்றாள். அனைவருமே அவளைப் பார்த்தார்கள்.

எல்லோரும் வந்து உட்கார்ந்த பிறகு சதுரானன பண்டிதர் கம்பருக்கு அருகில் மிகவும் பணிவோடு அமர்ந்து கொண்டார்.

''கவிச் சக்கரவர்த்தியவர்களே! தெய்வ தரிசனத்துக்குக் காத்திருப்பது போல், தங்களுக்காகக் காத்திருந்தோம். எங்கள் மண்ணுலக வாழ்க்கையில், நாங்கள் அடையக்கூடிய அழியாத பேரின்பம், தங்கள் திவ்விய தரிசனத்தைத் தவிர வேறு இருக்க முடியாது. கவிச் சக்கரவர்த்தி இந்தச் சிறு மடத்தினுள் தமது மலர்ப் பாதங்களால் நடந்து, இதைத் தெய்வத் தலமாக மாற்ற வருகிறார் என்று எண்ணி எண்ணிக் களித்தோம். தங்கள் திருவாயால் பொன்னுரைகளும், பொற் கனிகளும் கேட்டு ஜன்ம சாபல்யம் பெறத் துடிக்கிறோம். ஆனால் தாங்கள் உண்ட களைப்போடு இருக்கிறீர்கள். சற்றுச் சிரமபரிகாரம் செய்து கொள்ளுங்கள். நான் தங்களிடம் உத்தரவு பெற்றுச் சிறிது வெளியே போய்வர எண்ணுகிறேன்'' என்று சொல்லிக்கொண்டு எழுந்தார் சதுரானன பண்டிதர்.

கம்பரும் அவருக்கு விடை கொடுத்து அனுப்பினார். பிறகு பஞ்சணையில் சாய்ந்து கொண்டார் கவிஞர் பெருமான். மாணாக்கர் இருவர் அவருக்கு விசிறியால் விசிக் கொண்டிருந்தார்கள். கம்பருடைய உள்ளத்தில் அந்தப் பெண்ணைப் பற்றிய சிந்தனையே படர்ந்து கொண்டிருந்தது.

பிற்பகலின் உக்கிரம் தணிந்து மாலை நெருங்கிக்கொண்டிருக்கும்போது பண்டிதர் வந்தார். அப்போது கம்பர் மாணாக்கர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். பண்டிதரும் அமர்ந்து உரையாடலில் கலந்து கொண்டார். வெயில் நன்றாகத் தணிந்த பின் அவர்கள் கடற்கரைக்கு உலாவச் சென்றார்கள். கடற்கரை மணலிலும் இரண்டு நாழிகைப் பொழுது அமர்ந்து உரையாடினார்கள். சதுரானன பண்டிதரின் பெரும் புலமையையும் அடக்கத்தையும் கண்டு அவரைப் பெரிதும் பாராட்டினார் கம்பர். மடத்தின் நிலைமை, அதன் வருவாய்த் துறைகள், மாணாக்கர்களுக்குக் கற்பிக்கும் நூல் விவரங்கள் எல்லாவற்றையும் கம்பர் விசாரித்து அறிந்தார். பண்டிதரின் சமயப் பணியும், தமிழ்ப் பணியும் கம்பருடைய உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன.

அந்தி மயங்கி இரவு வந்தது. நிலவொளியில் அவர்கள் மடத்தை நோக்கித் திரும்பி வந்தார்கள். வரும் வழியில் தியாகராஜப் பெருமானின் ஆலயத்துக்குச் சென்று வழிபாடு செய்தார்கள். கடைசியில் மடத்துக்குத் திரும்பினார்கள். இரவு உணவும் ஆயிற்று. மடத்து முற்றத்தில் நிலவில் அமர்ந்து கவிச்சக்கரவர்த்தியுடன் பண்டிதர் உரையாடிக்கொண்டிருக்க, மாணாக்கர்கள் அகமகிழ்ந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது அந்தப் பெண் ஒரு பெரிய தட்டில் பாலும், பழங்களும் எடுத்துக் கொண்டு வந்து, சற்றுத் தூரத்தில், ஆனால் அனைவர் கண்ணிலும் படும்படியாக நின்றாள். ஒரு மாணவன் எழுந்து சென்று தட்டை வாங்கிக்கொண்டு வந்து, பண்டிதருக்கும், கம்பருக்கும் நடுவே வைத்தான்.

தட்டிலே வாழை, பலா, மா என்ற மூவகைக் கனிகளும் இருந்தன. ஒரு பாத்திரத்தில் பால் இருந்தது. பாலில் தேன் கலந்திருந்தது. கம்பரைச் சாப்பிடும்படி கேட்டுக்கொண்ட பண்டிதர், முப்பழங்களும் அன்று மடத்துக்கு எப்படிக் கிடைத்தன என்று ஆச்சரியப்பட்டார். ஆனால் ஆச்சரியத்தை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. அதே சமயத்தில் கம்பரும் கனிகளைக் கண்டு வியந்தார். ஆனால் அவரது வியப்பில் சோகமும் கலந்திருந்தது. தேன் கலந்த பாலைப் பருகியபோது கம்பரால் சிறிது நேரம் எதுவுமே பேச முடியவில்லை. ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார்.

''பண்டிதரே! இந்தக் கனிகளும் தேன் கலந்த பாலும் எனக்குப் பழைய நாட்களையெல்லாம் நினைவுக்குக் கொணர்கின்றன. திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளல் இரவுதோறும் எனக்கு அன்போடு படைப்பவை மூவகைப் பழங்களும் தேன் கலந்த பாலும்தான். இங்கும் அவ்வண்ணமே செய்து என்னை உபசரித்திருக்கிறீர்கள். அமரர் ஆகிவிட்ட என் ரட்சகர் சடையப்ப வள்ளலை இப்போது தங்கள் வடிவில் காண்கிறேன்'' என்று உணர்ச்சி பொங்கச் சொன்னார் கம்பர்.

உடனே பண்டிதர் அதை மறுத்துப் பேசினார்: ''கவிச் சக்கரவர்த்தி அவர்களே! இந்தச் சிறியோனுக்கு அவ்வளவு ஏற்றம் கொடுப்பது பொருந்தாது. அவையடக்கமாக நான் சொல்லவில்லை. உண்மையைக் கூறுகிறேன். இவ்வாறு தங்களுக்குக் கனி விருந்து செய்ய நான் எண்ணியவனே அல்ல. (பணிப் பெண்ணின் ஏற்பாடு என்று சொல்ல விரும்பாமல்) தெய்வ சங்கல்பமாக இவ்வாறு நடந்திருக்கிறது.''

''இல்லை. தாங்கள் என்னதான் மறுத்தாலும் நான் ஒப்ப மாட்டேன்.... எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும்; என் வள்ளலை இந்த நேரத்தில் எண்ணும்படி தாங்கள் செய்தது, ஒரு மாபெரும் புண்ணிய கைங்கரியம்....''

பணிப் பெண்ணைப் பற்றிப் பிரஸ்தாபிக்க வேண்டிய கட்டம் நெருங்குகிறதே என்று வருந்திய பண்டிதர், ''கவிஞர் பெருமான் இரண்டொரு பாடல்களையாவது எங்கள் செவிகள் கேட்கப் பாடியருள வேண்டும்'' என்று விண்ணப்பித்தார்.

''பாடுவதா? பண்டிதரே, என்னை மன்னியுங்கள். இன்று, இனிமேல் நான் பாடுவது இயலாத காரியம். வெண்ணெய்நல்லூர் வள்ளலைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியபின் பேசுவது எங்கே? மிகவும் கடினம்... தங்கள் மாணுக்கர்களையே பாடச் சொல்லுங்கள். நாம் இருவருமே கேட்போம். சிறுவர்களே! உங்களுக்கு உங்கள் ஆசிரியர் இசைப் பயிற்சியும் செய்வித்திருப்பார் என்றே எண்ணுகிறேன்'' என்ருர் கம்பர்.

''சிவஞானம்! நீயும் காளத்திநாதனும் சேர்ந்து கவிச் சக்கரவர்த்தியின் பாடல்களையே பாடுங்கள். அவர்கள் கேட்டு ஆசிர்வதிக்கட்டும். கிடைத்தற்கரிய பாக்கியம் உங்களுக்கு இன்று கிடைத்திருக்கிறது'' என்று பணித்தார் ஆசிரியர்.

கம்பராமாயணப் பாட்டுக்களை மாணுக்கர்கள் இசையோடு பாடிஞர்கள். இரண்டு பாட்டுக்களைப் பாடி முடித்து மூன்ருவது பாட்டைத் தொடங்கும்போது சற்று எட்டத் தூண் மறைவில் நின்று கொண்டிருந்த அந்த இளம் பெண் திடீரென்று அழத் தொடங்கிவிட்டாள். அழுகையும் விம்மலும் எல்லோருக்கும் கேட்டன. தூண் இருக்கும் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள். ''யாரோ அழும் குரல் அல்லவா?'' என்று கம்பர் கேட்டார்.

''ஆம், கவிஞர் பெருமானே!'' என்று கூறிய ஆசிரியர், ''காளத்தி! போய்ப் பார்!'' என்ருர்.

காளத்திநாதன் எழுந்து நின்று பார்த்து விட்டு வந்தான்.

''பணிப் பெண்.''

''பணிப் பெண்ணு? அவளை இங்கே கூப்பிடு'' என்ருர் பண்டிதர். காளத்திநாதன் போய் அவளை அழைத்து வந்தான்.

''அம்மா! ஏன் அழுகிருய்?''

''சுவாமி! இந்த அடிமையை மன்னிக்க வேண்டும் சுவாமி. உங்கள் உரையாடலுக்கு இடையூறு செய்த மகா பாவி நான். நான் போகிறேன். போய் வருகிறேன்...''

''வேண்டாம். நீ போக வேண்டாம். இங்கே அருகில் வந்து அழுத காரணத்தைச் சொல்'' என்ருர் கம்பர்.

''என்னை மன்னித்து விடுங்கள் சுவாமி. தங்களோடு நின்று பேசக்கூடத் தகுதியற்றவள் நான். தெய்வ சந்நிதியில் வந்து நான் நிற்பதே பாவம். போய் விடுகிறேன். என் முகத்தைப் பார்க்காதீர்கள்....''

கம்பருக்குத் திகைப்புக்கு மேல் திகைப்பாக இருந்தது. திடீரென்று உறுதியும், திண்மையும் நிறைந்த குரலில் அவர் பேசலாஞர். ''அருகில் வா. ஆம், நீ இப்படி வரவேண்டும்.''

பணிப் பெண் வந்தாள்.

''எதற்காக அழுதாய்?''

''சுவாமி! இந்தப் பாவ ஜன்மத்தையும் ஒரு பொருட்டாகக் கருதிப் பேசுகிறீர்கள் என்பதை எண்ணும்போது என் மனமே என்னைக் கொல்கிறது. ஆனுலும் தெய்வத்தைப் போன்ற தங்கள் கட்டளையை என்னுல் மீறவும் முடியவில்லையே!..... தாங்கள் அருளிய இந்தக் கவிதைகள் இந்த அடிமைக்குப் பாடம் உண்டு.....''



''உங்கள் ஆபீசுக்கு லேடி டைப்பிஸ்ட் வேண்டுமென்றீர்களே? நான் டிராமாவில் லேடி 'கேரக்டர்' தான் போடுகிறேன்!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''என்ன? உனக்குக் கம்ப ராமாயணம் தெரியுமா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டார் பண்டிதர்.

''ஆம், சுவாமி. என் அன்னை இசையோடு எனக்குச் சிறு வயதில் கற்பித்தாள்...... ....என் அன்னை கற்பித்த இந்தப் பாடல்களை நான் மனம் தோய்ந்து விதம் விதமாய்ப் பாடிப் பாடி மகிழ்வேன். சிறுமியாக இருந்த அந்த நாட்களும், என் அன்னையின் முகமும் நினைவுக்கு வந்தன....''

''இப்போது நீ ஒரு பாட்டையேனும் பாடு. பாடினுல்தான் நீ சொல்வதை உண்மை என்று ஒப்புக்கொள்ள முடியும்'' என்ருர் பண்டிதர்.

''பாடு!'' என்று கம்பரும் கூறிஞர்.

முதலில் பாடிய பாட்டில் அவளுடைய இசைத் திறமையும், குரலினிமையும் நூற்றில் ஒரு பங்குகூட வெளிப்படவில்லை. ஆனுல் அதுவே கம்பரையும், பண்டிதரையும் மாணுக்கர்களையும் மெய் மறக்கச் செய்து விட்டது. அப்புறம் இரண்டாவது பாட்டு; அதைத் தொடர்ந்து வேறு பாட்டுக்கள். ஐந்தாவது பாட்டில் அங்கே கந்தர்வ லோகமே வந்து இறங்கியதுபோல் இருந்தது.

அப்படிப்பட்ட இன்குரலைக் காளத்தைப் பண்டிதர் அதற்கு முன் எங்குமே கண்டதில்லை. ராஜ சபைகளில் புகழ் பெற்ற காயகச் செல்வர்கள் பாடியதை யெல்லாம் கேட்டவரான கம்பரும், பணிப்பெண்ணின் இசைக்கு ஒப்புவமை இருக்க முடியாது என்று முடிவு கட்டிஞர்.

ஒவ்வொரு சொல்லிலும் பொருளும், உணர்ச்சியும் ஒலித்தது என்பது பெரிதல்ல. இம்மை மறுமையைத் தொடுவது போலவும், மண்ணுலகம் வானுலகத்தைத் தீண்டுவது போலவும், மனிதன் தெய்வத்தோடு கைகோப்பது போலவும், கம்பருடைய இலக்கியத்தோடு உறவாடியது அவளுடைய இசை.

அந்த இலக்கியமும், அந்த இசையும் மேலே உயர்ந்தன.

சுவர்க்கத்துக்கு இரண்டு ஏணிகள் போட்ட மாதிரி ஆயிற்று.

அவளாகப் பாடுவதை நிறுத்தும் வரை அவர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

பாட்டு முடிந்தது.

கம்பர் பேசத் தொடங்கினார்.

"இனி நீ யார் என்பதையும் சொல்லிவிட வேண்டும். இது என் கட்டளை என்று வேண்டுமானாலும் நினைத்துக் கொள்."

"சுவாமி! எனக்குப் பூர்வத்தில் இதே ஊர்தான்...... என் தாய் இசையையும் நடனத்தையும் குலத் தொழிலாகக் கொண்டவள்..... அவள் இந்தக் கலைகளில் மேலும் அதிகப் பாண்டித்தியம் பெற விரும்பி, சோழ மண்டலத்துக்குச் சென்றாள். அங்கே தக்க ஆசான்களிடம் பல ஆண்டுகள் பயின்றாள். பிற்காலத்தில் எனக்கும் கற்பித்தாள்....."

"சோழ மண்டலத்தில் எந்த ஊரில் இருந்தீர்கள்?" என்று கம்பர் கேட்டார்.

"தஞ்சையிலும், திருக்கடவூரிலும் இருந்தோம். இறுதியில் என் அன்னை காலமான ஊரும், நான் சோழ மண்டலத்தை விட்டு இங்கே புறப்பட்டு வந்த ஊரும் திருவெண்ணெய் நல்லூர்."

கவிச் சக்கரவர்த்தி கம்பருக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

"திருவெண்ணெய் நல்லூரா! அப்படியானால், சடையப்ப வள்ளலைத் தெரியுமா?" என்று படபடப்போடு கேட்டார் கம்பர்.

"சுவாமி! எனக்கு அவரைத் தெரியும் என்றோ, என்னை அவருக்குத் தெரியும் என்றோ சொன்னால் என் நாக்கு அழுகி விடும். பாவத்தின் அவதாரமான நான், தரும தேவதையின் எதிரில் நின்றிருந்தால், என்றோ எரிந்து சாம்பலாகியிருப்பேன்......"

"இப்படியெல்லாம் ஏன் மனம் நொந்து பேசுகிறாய்? உன் இசையினால் ஏழு உலகையும் வெல்லும் பேராற்றல் படைத்த உனக்கு என்ன குறை?"

"நானே ஒரு குறைதான், சுவாமி!"

"இருக்கட்டும். நீ ஏன் திருவெண்ணெய் நல்லூரை விட்டு இங்கே வந்தாய்? உன்னை யார் அங்கிருந்து போகச் சொன்னார்கள்?"

"என்னை யாருமே போகச் சொல்லவில்லை. தெய்வம் போகச் சொன்னது: வள்ளல் இருக்கச் சொன்னார். இருப்பினும் தெய்வ சித்தமே வென்றது..... ஒரு நாள் இரவு கடுமையான புயல் வீசியது. மழையும் அருவியாகக் கொட்டியது. எங்கள் வீட்டுக் கூரை சரிந்து விழுந்து வெள்ளத்தில் போய் விட்டது. எங்களுடைய அற்ப சொற்பமான உடைமைகளையும் இழந்தோம். காலையில் வெறும் சுவர்களுக்கு நடுவே திசை தெரியாமல் நாங்கள் நின்று கொண்டிருந்த போது, திடீரென்று சடையப்ப வள்ளல் வீட்டிலிருந்து சிலர் வந்தனர். ஒரு வண்டியில் நாணற் புல் வந்தது. வந்தவர்கள் சுவர்களில் ஏறிக் கூரை வேய்ந்தார்கள். இந்த வேலை நடந்து கொண்டிருக்கும் போதே, வள்ளல் வீட்டுக் காரியஸ்தர் வந்து எங்களுக்கு ஆடைகள் கொடுத்தார். கையில் பணமும் கொடுத்தார். அவ்வளவு வஸ்திரங்களும் அவ்வளவு உணவுப் பொருள்களும் அதற்கு முன் எங்கள் வீட்டில் ஒரே சமயத்தில் இருந்ததில்லை. ஓர் ஆண்டு வரை எங்கள் ஜீவனத்தைப் பற்றிக் கவலைப்படாமல் இருக்க வழி செய்தார் அந்த வள்ளல். நாங்கள் பொது மாதர்கள். இந்த அற்ப ஜந்துக்களால் அவருடைய அறத்துக்கோ, அவருடைய கீர்த்திக்கோ மாசுபடுமோ என்று பயந்தோம். பொது மகளிராக இருந்த எங்கள் வாழ்க்கை அன்றோடு முடிந்தது. என் தாயோ, உயிர்வாழக்கூட மனமில்லாமல் சில மாதங்களில் இறந்து விட்டாள். நான் ஊரை விட்டே வந்து விட்டேன்......"

கம்பர் அவளுடைய கதையைக் கேட்டுக் கொண்டிருந்தார்; கண்களில் நீர் துளிக்கக் கேட்டுக் கொண்டிருந்தார்.

"ஒரு பெருமகனின் உதவி, ஒரு வேசியையும் தபஸ்வினியாக்கி விட்டது" என்றார் பண்டிதர்.

"தவறு! வள்ளல் செய்தது உதவியல்ல; உதவி, பாத்திரம் அறிந்து செய்யப்படுவது. அவர் அளித்தது பொருளும் அல்ல. வெறும் பொருள் மட்டும் மனிதாத்மாக்களை உயர்த்தி விடுவதில்லை. அவர் செய்தது அறச் செயல். அதன் பலன்தான் இந்தப் புனிதமான இடத்தில் கொண்டு வந்து இந்த வல்லியை......" என்று கம்பர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே......

"ஆ!" என்று கத்தினாள் அவள்.

வல்லி என்ற பெயரைக் கம்பர் சொன்னதும் பண்டிதரும் சீடர்களும் திகைத்தனர்.

"வல்லி! இப்பொழுது நீ யார் என்பதை அறிந்து கொண்டேன். பொது மாதர் வீட்டைச் சடையப்ப வள்ளல் வேய்ந்ததை நான் அப்பொழுதே பாடினேன். அன்று நான் வள்ளல் வீட்டில்தான் இருந்தேன்" என்றார் கம்பர்.

"தாங்கள் இருந்தீர்கள் என்பதும் எனக்குத் தெரியும், சுவாமி. ஆனால் என் பெயரை மட்டும் மறந்து விடுங்கள்."

"ஏன்? எதற்காக உன் பெயரை மறக்கச் சொல்கிறாய்?"

"பெயரை ஒழிக்கலாம், சுவாமி. பிறப்பை ஒழிக்க முடியுமா? குலத்தை மாற்றுவது முடிகிற காரியமா!"

"வல்லி! இறைவனுக்குத் தொண்டு செய்யப் புகுந்த அன்றே, ஒருவனுடைய பண்டைக் குலம் அழிந்துபடுகிறது என் பார்கள் பெரியவர்கள். தொண்டக் குலத்தில் பிறப்பினால் வரும் உயர்வு தாழ்வுகள் இருக்க முடியாது. சதுரானன பண்டிதருக்குப் பணி செய்யும் நீ இப்போது தொண்டக் குலம். உன் பழைமை ஒழிந்தது. உன் பெயரையுமே நீ அழித்து விட்டாய். 'நான்' என்ற தன்மையைக் கூட அறவே ஒழித்து விட்டாய். இது முனிவர்களுக்கும்கூட சாமான்யத்தில் சித்தியாகாத ஒரு பெருஞ் சாதனை. செயற்கரிய செய்த நீ, துன்பத்தை வைத்துக் கொண்டிருப்பது அறியாமை. வள்ளலின் அறச் செயல் உன் வாழ்க்கையை மாற்றியதோடு, உயர்த்தியும் விட்டது, வல்லி!......"

# உங்கள் கேசம் உதிருகிறதா?



பொடுகு

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



கேசம் உதிருதல்

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.



**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்றாக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

## ப்யூர் சில்விக்ரீன்




கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாதகால வைத்தியத்துக்குப் போதுமானது.

## சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்




உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.

# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/6/64



"நாளைக்கு ஆபீசுக்கு லீவு போடுகிறீர்களா?"
"ஏன்? எதற்காம்?"
"உங்களுடன் சண்டை பிடித்து வெகு நாளாயிற்று!"

"சுவாமி! காவிய பாத்திரங்களையும், வள்ளல் பெருமானைப் போன்ற மனித தெய்வங்களையும் பற்றிப் பேசும் தங்கள் திரு நாவினால் என் பெயரை உச்சரிக்க வேண்டாம்" என்று கேட்டுக் கொண்டாள் அவள்.

"பெண்ணே! 'நான்' என்ற அகங்காரத்தைக் கொல்ல முயல்வதன் மூலமே, அதை நீ மேலும் மேலும் வளர்த்துக்கொண்டு இருக்கிறாய்! உச்சரிப்பவர்களின் தூய்மையையும் கெடுத்து விடக் கூடிய அவ்வளவு பெரிய சக்தி உன் பெயருக்கு இருப்பதாக நினைக்கிறாயே! உன் பெயர் என்னைச் சுட்டு விடாது!" என்றார் கம்பர்; இலேசாகச் சிரித்தார். வள்ளி உடனே கவிச் சக்கரவர்த்தியை நோக்கிக் கீழே விழுந்து வணங்கினாள்.

"நான் ஒன்றும் அறியாதவள், சுவாமி. என் புத்திக்குத் தோன்றியதைச் சொன்னேன். குற்றம் இருந்தால் மன்னிக்க வேண்டும்"

"பண்டிதர் அவர்களே! வள்ளியின் பெயரை உங்களால் இனி மறக்க முடியுமா? என்னால் முடியாது. வள்ளலின் அறம் இவளுக்குக் குலம் தந்து, ஆன்மீகச் செல்வமும் தந்து விட்டது. வள்ளி! உனக்கு இனி யாரும் வழி காட்ட வேண்டாம். உன்னை நீயே காத்துக் கொள்வாய். ஆனால், உனது இந்தப் பிறப்புக்குத் துன்ப உணர்வு எதுவுமே ஆகாது. இதை மட்டும் நீ மறந்து விடாதே" என்று கம்பர் அவளுக்கு அறிவுரை கூறினார்.

"மறக்க மாட்டேன், ஸ்வாமி! ஆனால் தாங்கள் என்னை மறந்து விடுங்கள். கவி உள்ளத்தில் இடம் பெறுவதை நினைக்கும் போதே என் உள்ளமும் உடம்பும் கூசுகின்றன." — இவைதான் வள்ளி அன்றிரவு பேசிய கடைசி வார்த்தைகள். அதற்குமேல் கம்பர் அவளைப் பேச விடவில்லை.

"நீ உன் இருப்பிடத்துக்குப் போ. அகாலமாகி விட்டது" என்று கம்பர் கட்டளையிட்டார். பூசாரியின் வீட்டை நோக்கி வள்ளி புறப்பட்டுச் சென்றாள்.

"சதுரானன பண்டிதரே! எனக்கு மூவகைக் கனிகளும் தேனும் பாலும் மிகவும் பிடிக்கும் என்று தங்களுக்கு எப்படித் தெரிந்தது? வள்ளல் செய்வதைப் போன்றே தாங்களும் செய்த விதம் எப்படி?"

"கவிச் சக்கரவர்த்தி அவர்களே! இங்கே இரவில் நாங்கள் வாழைப் பழங்கள் மட்டும் தான் உண்பது வழக்கம். மடத்தில் பாலும் தேனும், மற்றப் பழங்களும் கிடையாது. வள்ளிதான் எங்கிருந்தோ சேகரம் செய்து கொண்டு வந்திருக்கிறாள். அவள் தட்டில் கொண்டு வந்ததும் நான் ஆச்சரியப்பட்டேன்" என்று பண்டிதர் விடை பகர்ந்தார்.

"எனக்கு என்ன பிடிக்கும் என்பதைக் கூட இந்தப் பெண் அறிந்து வைத்திருக்கிறாள்! திருவெண்ணெய்நல்லூரில் எனக்கு இப்படி ஒரு ரஸிகை, என்னைப் பற்றி எல்லா விவரங்களையும் நுட்பமாகவும் ஆவலாகவும் விசாரித்தறிந்துள்ள ஒரு ரஸிகை இருந்தது அப்போது எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால், வள்ளல் எனக்குச் செய்த மரியாதைகளை யெல்லாம் இவளுக்கும் செய்திருப்பார் என்பதில் ஐயமில்லை."

அதற்கு மேல் அவர்கள் பேசவில்லை. படுத்துறங்கப் போய் விட்டார்கள்.

மறு நாள் காலையில் உணவு உண்டபின் கம்பர் பயணமானார். சதுரானன பண்டிதரிடம் விடை பெற்றுக் கொண்டார். மாணாக்கர்களுக்கு ஆசி கூறினார். ஊர் மக்களுக்குச் சுபிட்சம் உண்டாக வேண்டும் என்று வாழ்த்தினார். அங்கே அது வரையிலும் இல்லாத வள்ளி, திடீரென்று வந்தாள். தன் இரு கைகளிலும் கம்பரின் பாதுகைகளை ஏந்திக் கொண்டு வந்தாள். கவிச் சக்கரவர்த்தியின் முன்னால் முழந்தாளிட்டு, அவர் திருவடிகளின் பக்கம் பாதுகைகளை ஏந்தினாள்.

"கீழே வைத்து விடு" என்றார் கம்பர்.

"இது நான் கோரும் வரம். இதை அருளாமல் என் தெய்வத்தை விட மாட்டேன். என் கைகளில் இருக்கும் பாதுகைகளைத்தான் தங்கள் திருப் பாதங்கள் சூட வேண்டும்."— குனிந்த தலை நிமிராமல் இந்த வார்த்தைகளைச் சொன்னாள் வள்ளி.

கம்பர் சிரித்தார். அவருடைய சிரிப்பில் காணப்பட்ட உருக்கம், அனைவர் கண்களையும் கலங்கச் செய்து விட்டது.

பாதுகைகளைக் கால்களில் தரித்துக் கொண்டார் கம்பர். மறு முறையும் விடை பெற்றுக் கொண்டார்.

வள்ளி அதி வேகமாக அவ்விடத்தை விட்டு மடத்தினுள் செல்வதற்காகத் திரும்பினாள்: அவளால் அங்கு நிற்கவே முடியவில்லை.

கம்பர் அவளை அழைத்தார்.

அவளும் அருகில் வந்தாள்.

"நீ என் கண் பார்வையிலிருந்துதான் மறைய முடியும். என் உள்ளத்திலிருந்து மறைய முடியாது. சதுரானன பண்டிதரின் மடத்தில் இருக்கும் திருவொற்றியூர் வள்ளி, இனி என் மனத்திலும் இருப்பாள். தெய்வம் உனக்குத் துணை செய்யும்."

கம்பர் சிவிகையில் ஏறிக் கொண்டார். கூடியிருந்த மக்கள் திரள் உச்சி மேல் கரம் குவித்துத் தொழுது அவரை வழியனுப்பியது.

## எடையிலும் ஏக்கமா?

# எடை குறைந்து

## எடுப்பாய் விளங்க

# லிமிகால்

மெல்லிடைப் பெண்மணி, அவள் நாகரீக ஓவியம். உடலோடொட்டிய உடையணிந்தவள்தான் இந்நாளைய நாகரீகத்தின் சின்னம். உடல் கனம் குறைவதற்குப் பத்தியமான உணவு தேவையில்லை. கடினமான தேகப் பயிற்சிகளும் வேண்டாம் — லிமிகால் அருந்தி சுலபமாக இளைக்க முடியும்.

லிமிகால் ஒரு தாவர உணவு—ருசியான, வாழைப்பழ, சாக்லேட் மற்றும் ஆரஞ்சு மணங்களில் கிடைக்கிறது. நீங்கள் லிமிகால் மட்டுமே அருந்தி துரிதமாகவோ அல்லது குறைந்த கலோரியுள்ள உணவுடன் அதை அருந்தி மெதுவாகவோ எடையைக் குறைக்கலாம்.

மேலும் லிமிகால் உங்கள் பசியைப் பூரணவும் தீர்க்கும் — சாப்பாடுகளுக்கிடையே சிறு தீனிக்குத் தேவையில்லை! உங்கள் பசியைக்குறைப்பதற்கான எவ்வித மருந்தும் இதில் கிடையாது. லிமிகால் அருந்திவரும்போது உங்கள் அன்றாட அலுவல்களைக் கவனித்து வரலாம்.

லிமிகாலைப் பரீட்சார்த்தமாக அருந்தியவர்களின் எடை வாரத்திற்கு சுமார் 3 லிருந்து 5 பவுண்டுகள்வரை குறைந்திருக்கிறது.

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் இவ்வளவு தான்—ஒரு டம்ளர் நீரில் 4 டேபிள் ஸ்பூன் லிமிகாலை நன்குக் கரைத்து அருந்திவிடுங்கள்! இது சீரான உணவுக்கு ஒப்பான குறைந்த கலோரியுள்ள முழு உணவாகும்.




இப்பொழுது சிக்கனமான வகையில் 1.6 கிலோகிராம் டின்னிலும் கிடைக்கிறது. ( ஒரு வாரத்திற்குப் போதுமானது )

உங்கள் டாக்டரும்

# லிமிகால்

அருந்தும்படி சிபார்சு செய்வார்.

“ஸ்லிம்மிங் வெல் லிம்பின்” என்னும் இலவசப் புத்தகத்தைப் பெற எழுதுங்கள்:

ஸாராபாய் கெமிகல்ஸ், தபால் பெட்டி எண் 1688 பம்பாய்—1.

சில்லறை விலை: 225 கிராம் டின் ரூ. 6.50, 1.6 கிலோகிராம் டின் ரூ. 33.50. விற்பனை வரி மற்றும் பிராந்திய வரிகள் தனி.

# நிமிஷக் கதைகள்

அந்தப் பள்ளியின் உபாத்தியாயருக்கு மாணவர்களின் கற்பனைத் திறன் எப்படி இருக்கிறது என்பதை அறிய ஆசை ஏற்பட்டது. 'நான் லட்சாதிபதியானால்' என்னும் தலைப்புக் கொடுத்து அவர்கள் எப்படி இருக்க விரும்புகிறார்கள் என்று ஒரு கட்டுரை எழுதச் சொன்னார். மாணவர்கள் அனைவரும் மும்முரமாக எழுதலாயினர்.

ஆனால் சந்திரன் என்னும் மாணவன் மட்டும் பேசாமல் உட்கார்ந்திருந்தான்.



''ஏன் சந்துரு! நீ மட்டும் பேசாமல் உட்கார்ந்திருக்கிறாய்? ஒன்றுமே எழுதத் தோன்றவில்லையா?'' என்று கேட்டார் ஆசிரியர்.

''நான் லட்சாதிபதியாகி விட்டால், இப்படியெல்லாம் எழுதிக் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்க மாட்டேன். ஹாயாக உட்கார்ந்திருப்பேன். அதையே இப்பொழுது செய்து கொண்டிருக்கிறேன்!'' என்றான் சந்திரன்.

★

**மனைவி:** நான் சொல்கிறதை நீங்கள் சரியாக வாங்கிக்கொண்டால்தானே? ஒரு காதால் கேட்டு இன்னொரு காதால் விட்டு விடுகிறீர்களே!

**கணவன்:** உனக்கு நான் எவ்வளவோ தேவலை. நீ



இரண்டு காதுகளாலும் கேட்டு விட்டு வாயால் அல்லவா விட்டு விடுகிறாய்!

★

பிரமுகர் ஒருவர் வருமான வரி அலுவலகத்துக்குச் சென்று அதிகாரியைப் பேட்டி கண்டார். ''என்னால் ஆகக் கூடிய காரியம் உங்களுக்கு ஏதாவது உண்டா?'' என்று அதிகாரி அவரைப் பார்த்துக் கேட்டார்.

''இல்லே, இல்லே! வெகு நாட்களாகவே எனக்கு ஓர் ஆசை. நான் யார் யாருக்காகச் சம்பாதிக்கிறேனோ, அவர்களையெல்லாம் பார்க்க வேண்டும் என்று! பார்த்து விட்டேன், வரட்டுமா?'' என்றார் பிரமுகர்.

★

''ஊரும் உலகமும் வைர முத்துவைப் பற்றிப் பெரிய தொழிலதிபர் என்று பேசிக் கொள்ளுகிறதே! ஒன்றும் தெரியாத மண்டு அப்பா அவர்! இன்று வெற்றிலை பாக்குக்கடை ஒன்றுக்கு வந்திருந்தார். விடுவிடு என்று விட்டேன் அவரை! உமக்கு என்ன ஐயா தொழில் தெரியும் என்று கேட்டேன்! என் பேச்சைக் கேட்டு ஆள் அப்படியே அசந்துட்டாரு! வியாபார நுணுக்கத்தைப்பத்தியெல்லாம் சொன்னேன்! என்னிடம் பிச்சை வாங்கணும்பா: இவங்களெல்லாம் ஆயிரத்தைப் பதினாயிரமாகவும் லட்சத்தைக் கோடியாகவும் ஆக்கும் வழிகளையெல்லாம் சொன்னேன். கேட்டுப் பிரமிச்சிட்டாரு!''

''அப்படியா? உன்னை 'வொர்க்கிங் பார்ட்னர்'ராகச் சேர்த்துக்கிறேன்னு அவர் சொல்லியிருப்பாரே!''

''அப்படிச் சொல்ல மூளை வேண்டாமா?''

''என்ன செய்தார்?''

''காதிலே வாங்கிக் கொள்ளாமல் காரில் ஏறிப் போயிட்டார்! நான் கட்டினேன் கால் நடையை!''

★

ஜார்ஜ் பெர்னார்ட்ஷா எழுதிய புது நாடகம் ஒன்று அன்றுதான் மேடையேறியது. அக்காலத்தில் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்தார் சர்ச்சில். அவருக்கு ஓர் அழைப்பு அனுப்பினார் ஷா. ''தாங்கள் கட்டாயம் நாடகத்துக்கு வர வேண்டும். டிக்கட்டும் இணைத்திருக்கிறேன். அதிகப்படியாகவும் ஒரு டிக்கட் வைத்திருக்கிறேன். உங்கள் நண்பரை அழைத்து வரலாம். அதாவது உங்களுக்குக்கூட நண்பர் என்று ஒருவர் இருக்க முடியுமானால்!'' என்று குறிப்பிட்டிருந்தார் பெர்னார்ட்ஷா.



சர்ச்சில் உடனே அவருக்குப் பதில் அனுப்பினார்: ''வேலை மிகுதி காரணமாகத் தங்கள் நாடகத்தை ஆரம்பத்திலிருந்து பார்க்க முடியாத நிலையில் இருக்கிறேன். காலதாமதமாகத்தான் வருவேன். கட்டாயம் இரண்டாவது காட்சிக்கு வந்து விடுகிறேன். அதாவது இரண்டாவது காட்சி நடைபெறக்கூடுமானால்!'' என்று அதில் எழுதியிருந்தது.



★

'''எல்லாம் நன்மைக்கே' என்பது எவ்வளவு அநுபவமான வார்த்தை. நமக்கென்று வீடு வாசல் இருந்திருந்தால் அதுவும் இப்படி வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்பட்டிருக்கலாம் அல்லவா?''

★

அகராதிக் குழுத் தலைவர்: சுத்த அகராதி பிடிச்ச பயலா யிருக்கிறானுக!

**நண்பர்:** யாரைச் சொல்றீங்க?



**அ. தலைவர்:** நம்ம உதவியாளர்களைத்தான் சொல்றேன். காலையிலே போய் என்ன வேலை நடந்திருக்கிறது என்று கேட்டேன்: 'கஞ்சன்'லே ஆரம்பிச்சுக் 'கருமி'யிலே வந்திருப்பதாகச் சொன்னாங்க. இப்ப போய்க் கேட்டால் 'காலாடி'ங்கிறாங்க.

## ஐம்பத்துநான்காவது அத்தியாயம்

"என்னடா, உன் அப்பா இடிரென்று கோபமாக வந்தார். திரும்பிப் போகும் போதும் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு போகிறாரே? ஏன் இப்படி வந்ததும் வராததுமாக உடனே திரும்பிப் போய் விட்டார்?" என்று வந்து விசாரித்த நண்பன் குமரப்பனுக்குத் தன் தந்தை வந்து விட்டுப் போன காரியத்தையும் நடந்தவற்றையும் விவரித்தான் சத்தியமூர்த்தி. அதைக் கேட்டு விட்டுக் குமரப்பன், "நல்ல காரியம் செய்தாய்! எதிலாவது கையெழுத்து வாங்கிக் கொண்டு உன்னை நிரந்தரமாகக் கம்பி எண்ண வைக்க முயலுகிறார்கள். கவனமாக விழித்துக் கொண்டிரு. தூங்கிப் போய் விடாதே. ஜமீன்தாரும் கண்ணாயிரமும் தானே உன் தந்தையைக் காரில் இங்கே கொண்டு வந்து இறக்கி விட்டுப் போனார்கள்! நான் கடையிலிருந்து பார்த்துக் கொண்டே இருந்தேனே. திரும்பிப் போகிற போதும் அதே கார்தானே வந்துஅவரை ஏற்றிக் கொண்டு போகிறது?" என்று குமரப்பன் சத்தியமூர்த்திக்கு விவரத்தைக் கூறி எச்சரித்து விட்டுப் போனான். முதன் முதலாகத் தான் வேலை பார்க்கிற ஊருக்குத் தந்தை தன்னைத் தேடி வர நேர்ந்து அதுவும் இப்படி அரைகுறைச் சந்திப்பாய் ஆகி முறிந்து போய் விட்டதே என்ற வருத்தம் ஒரு புறம் இருந்தாலும் தந்தையைக் கருவியாகப் பயன்படுத்தி வேண்டாதவர்கள் தனக்கு விரித்த வஞ்சக வலையைத் தான் அறுத்தெறிந்து விட்ட பெருமையையும் அவன் இப்போது தன்னுள் உணர்ந்திருந்தான். சில நாட்களாக அவன் மனம் ஓய்வு ஒழிவில்லாத எண்ணப் போராட்டங்களில் மூழ்கி யிருந்தது. 'நரி இடம் போனலென்ன? வலம் போனலென்ன? மேலே விழுந்து பிடுங்காமல் போனல் சரிதான்' என்ற மனப் பான்மையோடு தன்னை மட்டும் தப்பித்



துக் கொள்ள விரும்பாமல் எல்லாருடைய நியாயத்துக்காகவும் பொறுமையோடு காத்திருந்தான் அவன். பொறுமை யிழந்து மனம் கொதித்துக் குமுறும்படியான சோதனைகள் எல்லாம் வந்தன. அளவற்றுத் துன்பப்பட நேர்ந்த சமயங்களில் எல்லாம் அவற்றிலிருந்து விடுபட்டு ஓடி விட மட்டும் தவிக்கிற சமுதாயக் கோழையாக இருந்து விடாமல் அவன் மிக நிதானமாகச் சிந்தித்திருக்கிறான். இன்றும் அதே நிதானத்தோடுதான் இருந்தான் அவன். தன்னிடம் தந்தை கையெழுத்துப் போடச் சொல்லி நீட்டிய தாளைக் கிழித்தெறிந்ததைக்கூட அப்படிக் கிழித்தெறிந்த மறுகணமே தான் சற்றே நிதானம் தவறி ஆத்திரப்பட்டு விட்டோமோ என்று உணர்ந்து அவனால் வருந்தாமல் இருக்க முடியவில்லை. தந்தை வந்ததும், இரைந்ததும், முடிவில் கோபத்தோடு திரும்பிப் போனதும் — குமரப்பன் விசாரித்து விட்டுச் சென்றதற்கு அப்புறமும் கூட நெடு நேரம் அவன் நினைவைக் கலக்கிக் கொண்டிருந்தன. பொழுது சாய்கிற நேரத்துக்குக் குமரப்பன் கடையை அடைத்துக் கொண்டு மேலே வந்தபின் நண்பர்கள் இருவரும் வேக் அவென்யூ — கடை வீதி வழியாக உலாவப் புறப்பட்டார்கள். அப்போது தன் மனம் மேலும் அதிர்ந்து கலங்கும்படியான ஒரு நிகழ்ச்சியைச் சத்தியமூர்த்தி அங்கு எதிர்கொள்ள நேர்ந்தது. கடை வீதியிலிருந்த பிரபல பட்டு ஜவுளிக் கடை ஒன்றின் வாசலில் ஜமீன்தாரைப் பின் தொடர்ந்து மோகினி காரிலிருந்து கீழிறங்கி நடந்து கொண்டிருந்தாள். சத்தியமூர்த்தியின் தந்தையும் கண்ணாயிரமும்கூட அவர்களோடு உடன் வந்திருந்தார்கள். ஜமீன்தார் ஜவுளிக் கடையில் படியேறி உள்ளே நுழைந்து விட்ட பின்பும்கூட மோகினி கார் அருகிலிருந்து நகராமல் கண் கலங்கித் தயங்கி நின்றுகொண்டிருந்தாள். அப்படிப் பின் தங்கித் தயங்கி நின்றுகொண்டிருந்தவளைத் தன் தந்தை அருகிலிருந்து பயபக்தியோடு கடைக்குள்ளே வருமாறு அழைப்பதையும் சத்தியமூர்த்தி கவனித்தான். 'ஜமீன்தாரு இங்கே ஒரு காரியமா ஒருத்தரைக் காரிலே மதுரையிலேருந்து அழைச்சிக்கிட்டு வான்னாரு! வந்தேன்' என்று பகலில் தன்னைச் சந்திக்க வந்திருக்கும்போது 'மதுரையிலிருந்து அழைத்து



வந்ததாகக் குறிப்பிட்டது மோகினியைத் தான் என்பது இப்போது சத்தியமூர்த்திக்குப் புரிந்து விட்டது. 'அவங்க பரம்பரையா ஜமீன்தார் குடும்பத்துக்குப் பழக்கம். நீ அந்தப் பெண்ணைப் பார்க்கிறதோ, பேசறதோ கொஞ்சங்கூட நல்லா யில்லே! வீணா ஜமீன்தாரோட கோபத்துக்கு ஆளாகாதே' என்று மதுரையிலேயே தன்னைக் கண்டித்திருந்த தந்தை அதே மோகினியை ஜமீன்தாருடைய கட்டளையின்படி இப்போது மல்லிகைப் பந்தலுக்கு அழைத்து வந்திருப்பதைத் தெரிவிக்கத் தயங்கி யாரையோ அழைத்து வந்திருப்பதாகக் கூறியதை நினைத்து அவன் சிறிதும் வியப்படைய வில்லை. ஜமீன்தார் சொல்லித் தன் தந்தை மோகினியை மதுரையிலிருந்து மல்லிகைப் பந்தலுக்குக் காரில் அழைத்து வந்திருப்பதாக இப்போது அவனால் தெளிவாகவும், பிரத்தியட்சமாகவும் புரிந்து கொள்ள முடிந்தது. குமரப்பனோடு வீதியில் நடந்து வந்து கொண்டிருந்த சத்தியமூர்த்தி, பட்டு ஜவுளிக் கடை வாசலில் இந்தக் காட்சியைக் கண்ட போது நடையில் வேகம் குறைந்து தளர்ந்து நின்று விட்டான். குமரப்பனுக்கும் இந்த எதிர்பாராத சந்திப்பு ஆச்சரியத்தை அளித்தது. அவனும் அப்படியே திகைத்துப் போய் நண்பனுக்கு அருகில் நின்று விட்டான். அந்த நிலையில் மோகினி மிகவும் பரிதாபத்துக்குரியவளாகத் தென்பட்டாள். காரிலிருந்து இறங்கித் தயங்கி நின்ற அவளுடைய கண்களில் அழுகையும் கண்ணீரும் முந்திக் கொண்டு வந்தன. 'இன்பதற்கு மட்டுமல்லாது இன்னப்படுவதற்கென்றே அமைந்தாற் போன்ற பற்கள்' தெரியாதபடி மூடி மறைத்துக் கொண்டிருந்த அவள் உதடுகளில் அழுகை துடிதுடித்துக் கொண்டிருந்தது. அவர்களோடு அந்தக் கடைக்கு வருவதற்குப் பிரியமில்லாமல் வற்புறுத்தப்பட்டுப் பலவந்தமாகத் தான் அழைத்துக் கொண்டு வரப்பட்டிருப்பதைப் புலப்படுத்திக் கொண்டு நடைப்பிணமாய் நின்றாள் அவள். ஜமீன்தாரும், கண்ணாயிரமும், காரிலிருந்து இறங்கி—அப்படி அவர்களைப் போன்ற வசதியும் செல்வாக்கும் உள்ள புள்ளிகளுக்குக் கடைக்காரர்கள் வழக்கமாக அளிக்கும் மிக ஆடம்பரமான 'விவிக் ரிஸப்ஷனை'யும் ஏற்றுக் கொண்டு உள்ளே போய் விட்டார்கள். மோகினி மட்டும் பிரமை பிடித்தாற் போல் அழுது கொண்டு நின்றாள். ''வாங்கம்மா! ஐயா உள்ளாரக் காத்திருக்காரு'' என்று கடைக்காரர்களும் காரருகே வந்து அவளை வியாபார விசுவாசத்தோடு மிகப் பணிவாக அழைக்கத் தொடங்கி விட்டார்கள். கடைசியில் ஜமீன்தாரே உள்ளேயிருந்து எழுந்திருந்து வந்து கூப்பாடு போடவே மோகினி தயங்கித் தயங்கிப் படியேறிக் கடைக்குள் சென்றாள். அந்த நிலையில் அவள் தன்னை அங்கே பார்த்து விடாதபடி அவசரமாகக் கடை வீதியைக் கடந்து மேலே சென்று விட வேண்டும் என்று சத்தியமூர்த்தி எண்ணியிருந்தான். ஆனால் அவனுடைய எண்ணம் கடைசி விநாடியில் வீணாகி விட்டது. படியேறிக் கடைக்குள் நுழைவதற்காகத் தயங்கித் தயங்கிச் சென்று கொண்டிருந்த மோகினி கடைசிப் படியில் ஏறி விட்டுத் தற்செயலாக வீதிப் பக்கம் திரும்பியவள் — அவளுடைய பார்வையில் படக்கூடாது என்பதற்காகவே — அப்போது அவசர அவசரமாக வீதியைக் கடந்து கொண்டிருந்த சத்தியமூர்த்தியையும் குமரப்பனையும் பார்த்து விட்டாள். அந்தக் கணத்தில் அவளுடைய நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. தன்னை யறியாமலே கால்கள் விரைந்து முந்தியதன் காரணமாகத் திரும்பி ஒரு படி கீழே இறங்கவும் செய்து விட்டாள் அவள். அப்படியே கீழே இறங்கி வீதியில் ஓடிப் போய் விரைந்து நடந்து கொண்டிருக்கும் சத்தியமூர்த்தியின் பாதங்களில் விழுந்து, 'தெய்வமே! என்னைக் காப்பாற்றுங்கள்' என்று கதற வேண்டும் போலத் தவித்தது அவள் உள்ளம். ஆசைப்பட வைக்கும் அந்தப் பாதங்களில் ஓடிப் போய் வீழ்ந்து கதற வேண்டுமென்று அவள் நினைத்த அதே சமயத்தில் முன்புறம் நின்ற ஜமீன்தார் கையைப் பிடித்து இழுக்காத குறையாக அவளை உள்ளே தள்ளிக் கொண்டு போய் விட்டார். பட்டு ஜவுளிக் கடை வாசலை ஒட்டி நடந்த போது அவள் தன்னைப் பார்த்து விட்டாள் என்பது சத்தியமூர்த்திக்கும் தெரியும். ஆனாலும்

**பொன் விலங்கு**

**அதிகமாக அன்பு செய்கிறவன் அதிகக் கவலைப்பட்டுத்தான் ஆக வேண்டும். ஏனென்றால், அவனுடைய கவலையின் எல்லைகள் அவனது அன்பு வியாபித்திருக்கிற எல்லாப் பரப்புக்கும் உரியது.**

அவன் வேகமாக நடந்து கடையைக் கடந்து விட்டான். அவன் மனத்தின் ஒரு பகுதி அவனுடைய துயரங்களை நினைத்து மௌனமாகக் கலங்கி அழுது கொண்டிருந்தது. இன்னொரு பகுதி அவள் இப்படி யெல்லாம் ஜமீன்தாருடைய கைப் பாவையாக — அவருக்குப் பயந்து அடங்கி ஒடுங்கி இயங்குவதைப் பற்றி நினைத்து நினைத்து உள் நெருப்பாய்க் குமுறிக் கொண்டிருந்தது. அவள் மேல் அளவுகடந்த பிரியமும் நம்பிக்கையும் வைத்து விட்ட காரணத்தினால் அவள் இன்னொருவருக்கு அடிமைப்படுகிறாள் என்று தெரிகிற போதெல்லாம் மனம் குமுறினான் சத்தியமூர்த்தி. யார் மேலும் மனம் வைத்து அன்பு செய்யாத வரை நாம் இன்னொருவருக்காகக் கவலைப்பட்டுக் கலங்கி அழ வேண்டியதில்லை. மனம் வைத்து அன்பு செய்ய ஆரம்பித்து விட்டால் அந்த அன்புக்கு ஆளாகிறவரைப் பற்றிய கவலைகளையும் தவிர்க்க முடியாமல் போகிறது. அதிகமாக அன்பு செய்கிறவன் அதிகமாகக் கவலைப்பட்டுத்தான் ஆக வேண்டும். ஏனென்றால், அவனுடைய கவலையின் எல்லைகள் அவனது அன்பு வியாபித்திருக்கிற எல்லாப் பரப்புக்கும் உரியது. மோகினியைச் சந்தித்த அதிர்ச்சியிலிருந்து மீள முடியாமல் மௌனமாக நடந்து கொண்டிருந்த சத்தியமூர்த்தியிடம் உடன் சென்ற குமரப்பன் மெல்லப் பேச்சுக் கொடுத்தான்.

''மோகினி மல்லிகைப் பந்தலுக்கு வந்திருப்பது உனக்கே இப்போதுதான் தெரியுமா சத்தியம்?''

பதில் பேச முடியாமல் மனம் கலங்கிப் போயிருந்த சத்தியமூர்த்தி, 'ஆமாம்' - என்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தான். குமரப்பனே மேலும் பேசினான்:

''பாவம்! அந்தப் பெண் அழுது கொண்டே படியேறிக் கடைக்குள் போகிறாள். ஒரு பெண்ணின் உணர்ச்சிகளை மிகவும் மலிவான விலைக்கு வாங்கிவிட முயல்கிற இந்த ஜமீன்தாரை நினைத்தாலும் பரிதாபமாகத்தான் இருக்கிறது. ஒரு பெண்ணின் அந்தரங்கத்தை விலைக்கு வாங்கி விடுவதற்குப் பட்டு, தங்கம், வைரம், கார், பங்களா—இவையெல்லாம் மிகவும் சாதாரணமான விலைகள். சாதாரணமான விலைகளைக் கொண்டு அசாதாரணமான அன்பைப் பேரம் பேசி வாங்கிவிட முடியும் என்று நினைப்பதே பேதைமை......''

'' அப்படியும் சொல்வதற்கில்லை, குமரப்பன்! இந்த மோசக்கார உலகத்தில் சில சமயங்களில் அசாதாரணமான



''எத்தனை மீட்டருங்க கிழிக்கட்டும்?''
''மீட்டரா! ஒரு கால் பர்லாங் கிழிப்பா!''

பொருள்களும் கூடச் சந்தர்ப்ப வசத்தினால் சாதாரண விலைக்குப் போய் விடுகின்றன. அப்படிப்பட்ட சமயங்களில் அநுதாபப்பட்டுத் தவிப்பதைத் தவிர நம்மால் வேறென்ன செய்ய முடியும்?'' என்று உள்ளடங்கிய ஆத்திரத்தோடு சத்தியமூர்த்தி கூறியதைக் கேட்டு நடப்பதை நிறுத்தி விட்டு நண்பனின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் குமரப்பன். மோகினியின் அன்பு சாதாரணமான விலைக்குப் போய் விடும் என்று தான் ஒரு கருத்தைக் கூற நேர்ந்து சத்தியமூர்த்தி அதைக் கடுமையாக மறுத்திருந்தால் குமரப்பன் அப்போது சிறிதும் ஆச்சரியப்பட்டிருக்க மாட்டான். சத்தியமூர்த்தியே அப்படிக் கூறியதைக் கேட்டுத்தான் அவனுக்குத் திகைப்பாயிருந்தது. மோகினி ஜமீன்தாரோடு ஜவுளிக் கடைக்கு வந்ததை விரும்பாமல் சத்தியமூர்த்தியின் மனத்தில் கோபமோ — ஆத்திரமோ — மூண்டிருக்க வேண்டும் என்று குமரப்பனுக்குப் புரிந்தது. அவன் நண்பனைச் சமாதானப்படுத்த விரும்பினான்:

''உன் கோபம் காரணமற்றது சத்தியம்! அவள் என்ன செய்வாள் அபலைப் பெண்! பாவம்! அவளுடைய நிலையை எண்ணி அநுதாபப்பட வேண்டிய நீயே இப்படிப் பேசுவதை நினைத்தால் எனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கிறது....''

சத்தியமூர்த்தி இதைக் கேட்டு நண்பனுக்கு மறுமொழி ஒன்றும் கூறவில்லை.

பேசாமல் நடந்தான். ஜமீன்தாருடைய உத்தரவுக்குப் பயந்து மனப்பூர்வமாக ஆசைப்பட்டு மல்லிகைப் பந்தலுக்கு அவள் வந்திருப்பாள் என்றோ, விருப்பத்தோடு பட்டுப் புடைவைக் கடைக்குப் புறப்பட்டிருப்பாள் என்றோ சத்தியமூர்த்தியும் கூடத் தன் அந்தரங்கத்தில் நம்பவில்லை. அவளுடைய இதயம் தன்னிடம்தான் இருக்கிறதென்று உணர்ந்து அங்கீகரித்துக் கொண்டிருந்தும் இத்தகைய வேளைகளில் மனம் தடுமாறிக் குமுறாமல் இருக்க முடியாதபடி தானும் உணர்ச்சிகளால் உந்தப்படுவதைத் தவிர்க்க இயலாது தவித்தான் சத்தியமூர்த்தி. அநுதாபமும், கோபமும் கலந்த இந்த விநோத உணர்ச்சிக்கு அவன் பல முறை ஆளாகி யிருக்கிறான். ஆனால் ஒவ்வொரு முறையும் இந்த உணர்ச்சி மோகினியின் காரணமாகவேதான் அவனுக்கு ஏற்பட்டிருக்கிறது. அநுதாபத்தை மறுபுறமாகக் கொண்ட ஆத்திரம், அன்புடையவர்கள் மேல்தான் ஏற்பட முடியும். சத்தியமூர்த்தியின் மனத்தில் அந்த வேளையில் பொங்கிக் கொண்டிருந்த ஆத்திரமும் அத்தகையதுதான். மனம் குழம்பி யிருந்த இந்த விநாடியிலும்கூட மதுரையிலிருந்து நவராத்திரி விடுமுறை முடிந்து தான் மல்லிகைப் பந்தலுக்குப் புறப்படுவதற்கு முன் கோச்சடையிலுள்ள மஞ்சள்பட்டி அரண்மனையில் மோகினிக்கும் தனக்குமிடையே நிகழ்ந்த ஓர் உருக்கமான உரையாடல் இப்போது சத்தியமூர்த்திக்கு நினைவு வந்தது. அவளைப் பற்றிய அந்தப் பழைய நினைவு இப்போதும் அவனுக்கு ஆறுதலாயிருந்தது.

'உன் மேல் கோபப்பட்டு என்ன பயன் மோகினி? நீ ஒரு பேதை! உன்னைச் சந்திக்காமல் இருந்தால் நானும் என்னுடைய வாழ்க்கையில் ஓர் அழகிய பேதையின் அவலங்களை நினைத்து இப்படிக் கண் கலங்க நேர்ந்திருக்காது' என்று தான் கூறியவுடன், 'அப்படிச் சொல்லாதீர்கள்! உங்களைச் சந்திக்காமலிருந்தால் நான் வாழவே நேர்ந்திருக்காது' என்பதாக அவள் மறுமொழி கூறிவிட்டு அழுத உருக்கமான நிகழ்ச்சி இப்போது அவனுக்கு ஞாபகம் வந்தது. ஆஸ்பத்திரியில் வஸந்த ஸேனை சாருதத்தன் கதையை மோகினிக்குக் கூறிய சம்பவமும் இப்போது அவனுக்கு நினைவு வந்தது. ஒவ்வொன்றாக நினைவு வந்து அவன் மனத்தைக் கலக்கிக் கொண்டிருந்தன. நண்பன் குமரப்பனோடு நடந்து சென்றவாறே சத்தியமூர்த்தி இப்படி மனம் வருந்தி வேதனைப்பட்டுக் கொண்டிருந்த இதே வேளையில் பட்டுப் புடைவைக் கடைக்குள் நுழைந்த மோகினி தூண்டிற் புழுவைப் போல் அங்கு இருப்புக் கொள்ளாமல் தவித்தாள். ஜமீன்தாரோ அவள் மனத்தைக் கவர வேண்டுமென்பதற்காகக் கடைக்காரனிடம் சொல்லி விதம் விதமான பட்டுப் புடைவைகளை அள்ளிக் குவித்துக் கொண்டிருந்தார். அவளுடைய மனமோ கடைக்குள் நுழைவதற்கு முன் சத்தியமூர்த்தியை அந்த வீதியில் சந்தித்த ஞாபகத்தில் ஆழ்ந்து போயிருந்தது. அப்போது ஒரு கணம் சத்தியமூர்த்தியின் பார்வையும் தன் பக்கம் திரும்பிக் கவனித்தது அவளுக்குத் தெரியும். 'நான் மஞ்சள்பட்டி ஜமீன்தாரும், கண்ணாயிரமும் உடன்வர ஜவுளிக் கடைக்குள் நுழைவதைப் பார்த்து அவர் என்ன நினைத்துக் கொண்டு போகிறாரோ?' என்று எண்ணிய போது அவளுக்கு வேதனை தாங்க முடியவில்லை. 'ஜமீன்தாரையும் கண்ணாயிரத்தையும் அவருக்குப் பிடிக்காது! 'நான் இவர்களோடு எதற்காக மல்லிகைப்பந்தலுக்குப் புறப்பட்டு வந்தேன்? எப்போது வந்தேன்? எப்படி வந்தேன்?' என்றெல்லாம் சந்தேகப்பட்டு அவராகவே தம் மனத்தில் ஏதாவது கற்பனை செய்து கொண்டு என் மேல் ஆத்திரப்படப் போகிறாரே?' என்று எண்ணிப் பயந்த போது மோகினியின் அந்தப் பயத்தில் 'சத்தியமூர்த்தி தன்னைத் தவறாகப் புரிந்து கொள்ளக் கூடாதே' என்ற சுயநல நோக்கமே இல்லை. ஓர் இந்துக் குடும்பத்தில் மனைவி கணவனுக்கு அடங்கி அஞ்ச வேண்டிய நியாயமான அடக்கம் — பரம்பரை பரம்பரையாகப் பெண் குலத்தினாலேயே 'இது தன்னல்லை' என்று புரிந்து அங்கீகரித்துக் கொள்ளப்பட்ட அடக்கம்தான் அப்போது மோகினியின் பயமாகவும் இருந்தது. மாலையில் திடீரென்று இருந்தாற் போலிருந்து புடைவைக் கடைக்குப் புறப்பட வேண்டும் என்று கண்ணாயிரம் கூறிய போதே அவளுக்கு வெறுப்பாயிருந்தது. ''அப்பா காவமாகி நானாக வில்லை. நான் உங்களோடு புடைவைக் கடைக்கு வந்தால் நன்றாயிருக்காது அக்கா! நீங்கள் மட்டும் போய் விட்டு வாருங்கள்'' என்று சொல்லிப் பாரதி உடன் வர மறுத்து விட்டாள். ஜமீன்தாரும் கண்ணாயிரமும் 'போர்டிகோ'வில் காரைக் கொண்டு வந்து நிறுத்திக் கொண்டு அவளையும் அழைத்து வருமாறு அந்தக் கணக்குப் பிள்ளைக் கிழவரை உள்ளே துரத்தி யிருந்தார்கள். ஜமீன்தாருக்குப் பயந்து மல்லிகைப்பந்தலுக்குப் புறப்பட்டு வந்த போதே

உணர்ச்சி செத்துப் போய்க் கொலைக் களத்துக்குப் புறப்பட்டு வருவது போல் வந்து சேர்ந்திருந்தாள் அவள். அவளைப் புடைவைக் கடைக்கு அழைத்துப் போய் ஊரார் மெச்சும்படி வாங்கிக் கொடுத்து மகிழச் செய்ய வேண்டுமென்று ஜமீன் தாருக்கு ஆசையாயிருந்தது. அந்த ஆசையை அவள் வெறுத்தாலும் வெளிப்படையாகத் துணிந்து மறுக்க முடியவில்லை. அநியாயமாக ஜமீன்தா ருக்குக் கோபம் வந்து பிறர் முன்னிலை யில் ஒரு பெரிய கலகமும் கூப்பாடும் ஏற்படாமல் தவிர்ப்பதற்காகவாவது அவள் அவரோடு கடைக்குப் புறப்பட வேண்டியதாயிற்று. கடை வீதியில் சத்தியமூர்த்தியை ஒரு கணம் பார்க்க நேர்ந்தபோதோ அவளுடைய வேதனை இன்னும் அதிகமாகி விட்டது. புடவை களைப் பார்ப்பதில் மனம் செல்லவில்லை. பார்த்த புடைவைகளும் பிடிக்கவில்லை. மனத்துக்குப் பிடித்தவர் ஒரு கந்தல் துணியை வாங்கிக் கொடுத்துக் கட்டிக் கொள்ளச் சொன்னாலும் அது சிறப்பா யிருக்கும். மனத்துக்குப் பிடிக்காதவர் வைரத்தால் இழைத்துப் பொன்னால் நெய்த பட்டுப் புடைவைகளை மலை மலை யாக வாங்கிக் கொடுத்தாலும் எடுத்துக் கட்டிக் கொள்கிற போது ஒவ்வொரு பட்டும் உடம்பிலே பாம்பாக நெளிவது போல் அருவருப்பாயிருக்கும். அவள் அங்கே பார்த்த பட்டுப் புடைவைகளில் எதுவுமே தனக்குப் பிடித்ததாகச் சொல்லவில்லை. ஜமீன்தாரும், கண்ணு யிரமும் அவர்களுடைய இரசனைக்கெட் டிய வரையில் எந்தெந்த நிறத்திலோ பளீர் பளீரென்று மின்னும்படியான பட்டுப் புடைவைகளைத் தேர்ந்தெடுத்து முடித்தார்கள். பில் வந்தது. இரண் டாயிரத்து ஐந்நூறு ரூபாய்க்கு மேல் ஜமீன்தாரிடமிருந்து பணம் 'செக்' காகக் கடைக்காரர்கள் கைக்கு மாறி யது. கடைக்காரர்கள் மூட்டை கட் டிக் கொடுத்த ஜவுளியைக் கணக்குப் பிள்ளைக் கிழவர் வாங்கிக் கொண்டு போய்க் காரில் வைத்தார். உயிரற்ற பொம்மையாய் இயங்கி நடந்து போய் மோகினியும் காரில் உட்கார்ந்தாள். பக்கத்தில் ஜமீன்தாரும் உட்கார்ந்து கொண்டார். மோகினி ஜமீன்தார் மேல் பட்டுவிடாமல் விலகிக் கதவோரமாக ஒட்டினாற் போலக் காரின் மறுகோடியில் உட்கார்ந்து கொண்டாள். அவள் விலகி உட்கார்ந்திருப்பதைப் பார்த்து உள் ளூறக் கோபம் குமுறினாலும் வெளிப் படையாக அருகில் உட்காரச் சொல்லி மிரட்டுவதோ, கோபிப்பதோ சாத்திய மில்லையாதலால் ஜமீன்தார் சிரமப் பட்டுப் பொறுமையா யிருக்கும்படி ஆயிற்று. கண்ணுயிரமும் கணக்குப்பிள் ளைக் கிழவரும் முன் ஸீட்டில் ஏறிக் கொண்டபின் கார் புறப்பட்டது. பூக் கடை வாசலில், ''ஒரு நிமிஷம் காரை நிறுத்து'' என்று சொல்லித் தாமே கீழே இறங்கிய ஜமீன்தார் ஒரு பெரிய பொட்டலம் பூவை வாங்கிக் கொண்டு வந்து மோகினியிடம் நீட்டினார். மோகினி இரண்டு விநாடிகள் தயங்கி விட்டு அதை வேண்டா வெறுப்பாய் இடது கையால் வாங்கிக் காரில் வைத் தாள். முன் கோபக்காரரான ஜமீன் தார் தம்முடைய ஆத்திரத்தின் போக் கைக் கட்டுப்படுத்திக் கொண்டு உள் ளேயே எரிமலையாகக் குமுறிக் கொண் டிருந்தார். 'அவளுடைய பிரியத்தின் விலை என்னவாக இருக்க முடியும் ?' என்று புரிந்து கொள்ள இயலாமல் தவித்தது அந்த ஜமீன்தாரின் முரட்டு இதயம்.

(தொடரும்)

---





இப்பொழுது

சென்னை சித்ரா, பிராட்வே, மேகலா

மற்றும் தென்னாடெங்கும்
நடைபெறுகிறது







தேவர்
பிலிம்ஸ்





# வேட்டைக்காரன்

டைரக்ஷன்· M.A. திருமுகம்

தயாரிப்பு· சாண்டோ M.M.A. சின்னப்பா தேவர்

ELEGANT



# நாணயம்

கிருஷ்ணன் நம்பி

**நா**ன் பிச்சாண்டி. இது கூப்பிடுகிற பெயர். நிஜப் பெயர் சங்கர நாராயணன். அப்போது நான் நாகர்கோயில் கல்லூரியில் பி. யூ. ஸி. படித்துக் கொண்டிருந்தேன். பி. யூ. ஸி. படிப்பதற்கு எனக்கு வக்கில்லே. ஆனாலும் நான் பி. யூ. ஸி. படித்தேன். தூரத்து உறவினர் ஒருவர் — ஏதோ ஒரு வகையில் மாமா உறவு — என் கல்லூரிப் படிப்புச் செலவைத் தாமே ஏற்றுக் கொண்டு, தம் வீட்டிலேயே தங்கவும், உண்ணவும், வீட்டில் ஒருவனாய் நடமாடித் திரியவும் வசதி செய்து கொடுத்தது எத்தனே மகத்தான காரியம்!

ஜூன் மாதம் கல்லூரி திறந்ததும், ஒரு பெரிய காவி நிறப் பையில் என் வேட்டி சட்டைகளேயும், எனக்கு அவசியம் என்று நான் நினேத்த வேறு ஒன்றிரண்டு சாமான்களேயும் திணித்துக் கொண்டு, கிராமத்தை விட்டு, எட்டு மைல் சர்க்கார் பஸ்ஸில் பிரயாணம் செய்து நாகர்கோயிலுக்குப் போய்ச் சேர்ந்தேன். மாமா வீட்டில் மாமாவும், மாமியும் தவிர, வேறு யாரும் கிடையாது. அவர்களுடைய ஒரே பெண் தைலாம்பாள் தன் கணவனுடன் அகமதாபாத்தில் ஒரு பெரிய கட்டடத்தின் மூன்றும் மாடியில் இரண்டே அறைகள் கொண்ட ஒரு போர்ஷனில் ஹிந்திச் சூழலில் குடித்தனம் பண்ணப் போய் வருஷங்கள் இரண்டு இரண்டரையாகி விட்டன.

மாமா பெயர் சுப்பிரமணியம். மாமி ஆனந்தவல்லி. மாமாவுக்குப் பஜாரில் இரும்பு, ஸிமெண்ட் வியாபாரம். மாமி என்னிடம் மிகவும் பிரியமாக இருந்தாள். வயிறு நிறைய எனக்குச் சாப்பாடு போட்டாள். வீட்டின் மாடி முழுவதும் என் ஆளுகைக்கு விடப்பட்டிருந்தது. எனக்குப் போட்டியாகத் தான் யாரும் அங்கில்லேயே. மாடியில் ஆறு ஜன்னல்கள் இருந்ததால் காற்றுக்கும் வெளிச்சத்துக்கும் எப்போதுமே பஞ்சம் இல்லே. ஜன்னல்களின் வழியாகத் தெருவையும், நடமாட்டங்களேயும், பல தென்னே மரங்களேயும் ஒரு மாமரத்தையும், சில வீடுகளின் கூரை முகட்டையும், தெருக் குழாயையும், ஆகாசத்தையும் இன்னும் சிலவற்றையும் எப்போதும் எனக்குப் பார்க்க முடிந்தது. கிழக்குப் பார்த்த ஒரு ஜன்னலின் அருகே ஒரு சாய்வு நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்து நான் கல்லூரிப் பாடங்கள் படிப்பேன். இடையிடையே ஜன்னலுக்கு வெளியே பார்வையைச் செலுத்தி உலகத்தை நோக்குவேன். உலகத்தைப் பார்க்கையில் ஆயிரம் வகையான எண்ணங்கள் என் மனசில் பொங்கிப் புறப்படும். படிப்பில் மனம் செல்லாது. உலகம் மகிழ்ச்சியாலும், கேளிக்கைகளாலும் நிறைந்திருப்பதாயும், நான் மட்டும் அந்த மாடியில் ஓர் அதிர்ஷ்டக் கட்டையாய் விழுந்து கிடப்பதாயும் எண்ணிக் கொள்வேன். ஏன் நான் அப்படி எண்ணினேன் என்பதெல்லாம் எனக்குத் தெரியவில்லே. ஆனால் உலகத்தின் கோடி வகைப்பட்ட இன்பங்களே யெல்லாம் சுவைக்கும் ஆசை சிறு வயதிலிருந்தே என் ஊன் துருதுருத்துக் கொண்டிருந்தது. படிக்க வேண்டுமென்றோ, படித்துக் கொடி கட்டி உத்தியோகம் பார்க்க வேண்டுமென்றோ எனக்கு ஆசை இருக்க வில்லை. 'உத்தியோகம் பண்ணிப் பணம் சம்பாதித்தவன் எவனடா இருக்கிறான்?' என்று கேட்பார் சுப்பிரமணிய மாமா. 'ஹி இஸ் கரெக்ட்.' பள்ளிக்கூடத்து நிழலில் சரியாக மூன்று வருஷங்கள்கூட ஒதுங்காதவரான அவர், நாற்பது வயசுக்குள் ஒன்றரை லட்சத்துக்கு மேலே 'பாங்க் பாலன்'ஸ் கொண்டு வந்து விட்டார். அவரை என் இலட்சியமாகவே நான் கண்டேன். சொந்தத்தில் கார் வைத்துக் கொண்டு மாமா ஊர்வலம் வந்தார். திடகாத்திரமாக இருந்தார். காலையில் டிகிரி காப்பியும் ஆப்பிள் பழங்களும் சாப்பிட்டார். இரவில் ஹார்லிக்ஸ் அல்லது அது போல் வேறொன்று. சாயங்காலம் காப்பிக்கு முன் ஆரஞ்சும், பூவன் பழமும், மாமி வகை வகையாய்ப் பண்ணிக் கொடுக்கும் இனிப்பும், காரங்களும். இவை தவிர, மாமிக்குத் தெரிந்தோ, தெரியாமலோ உயர்ந்த ரக சிகரெட்டுகளும் பிடித்தார். அடிக்கடி மதுவிலக்கு அமுலாகாதிருந்த 'சரப்' பிரதேசங்களுக்கு அவர் சென்று வருவதுண்டு என்பது டிரைவர் வேதமாணிக்கம் சொல்லி எனக்குத் தெரியும்.

மாமா அதிருஷ்டசாலி. இருந்தால் அவரைப் போல் இருக்க வேண்டும். வேதமாணிக்

கம்கூட கொஞ்சம் அதிர்ஷ்டக்காரன்தான். மாமா போகும் இடங்களுக்கெல்லாம் இவனும் போகிறான் அல்லவா? அவர் மேல் படுகிற காற்று அவன் மேலும் சிறிது படாதா என்ன? படும் என்று பட்டும் படாமலும் அவன் சொல்லித்தான் இருக்கிறான். மாமாவின் டிரைவராக இருந்தால்கூடத் தேவலை என்று பல சமயம் நான் எண்ணமிட்டிருக்கிறேன். அடிக்கடி சினிமா பார்க்க வேண்டும் என்கிற என் ஆசைகூட நிறைவேற மாட்டேன் என்கிறது. தினமும் படம் பார்க்கப் போகும் மாணவர்கள் பலரை காலேஜில் எனக்குத் தெரியும். இங்கிலீஷ் படங்கள் பார்க்க முடியாமல் இருப்பது போன்ற துர்ப்பாக்கியம் என்ன உண்டு இந்த உலகத்தில்? நாகர்கோயிலுக்கு வந்து இங்கிலீஷ் படங்கள் பார்க்க வேண்டும் என்று நான் எவ்வளவோ ஆசைப்பட்டேன். அது நடக்க வில்லை. என்னிடம் காசு கிடையாது. என்னைத் தம் செலவில் சினிமாவுக்கு அழைத்துப் போகிற உத்தம நண்பர்களும் எனக்குக் கிடைக்க வில்லை. அசட்டு சங்கோசத்துடன் ஒதுங்கி ஒதுங்கி நடக்கும் என்னிடம் எவன் வருவான்? படிப்பிலும் நான் கெட்டிக்காரன் அல்ல. மிகக் கெட்டிக்காரனான என் வகுப்பு தரித்திர மாணவன் ஒருவன் பணக்கார முட்டாள் மாணவன் ஒருவனின் தயவில் வாரம் தவறாமல் சினிமா பார்த்து விட்டு, ஹோட்டலில் டிபனும் சாப்பிட்டு விட்டு வருவான். என் சுபாவத்துக்கும், என் தகுதிக்கும் நான் விரும்புகிறாற்போன்ற சிநேகிதர்கள் எனக்குக் கிடைக்க மாட்டார்கள். ஜே. ராமன் போற்றி ஓட்டலில் ரவா தோசையும் வெங்காய பஜ்ஜியும் பிரமாதம் என்று என் பக்கத்துப் பையன் சுயம்புலிங்கம் வாய்க்கு வாய் சொல்லுவான் பரவசத்துடன். ஜே. ராமன் போற்றி ஹோட்டலுக்கு என்னை அழைத்துப் போய் டிபன் வாங்கிக் கொடுக்கும் எண்ணத்தைச் சுயம்புலிங்கத்திடமோ அல்லது வேறு யாரிடத்திலுமோ ஏற்படுத்தும் நவீன நாகரிக வித்தைகளும் எனக்குக் கைவரவில்லை.

மாமாவிடமோ, மாமியிடமோ வட்டச் செலவுக்குக் காசு கேட்பது நன்றாகஇருக்குமா? ஏற்கனவே எனக்காக அவர்கள் செய்து கொண்டிருந்த செலவு போதாதா? அதற்கே அவர்களுக்கு என் தோலைச் செருப்பாக்கிக் கொடுக்கக் கடமைப்பட்டவன் நான்.

இப்படி ஆயிரம் நியாயங்கள் இருந்தென்ன! என்றால் என் ஆசைகளைக் கட்டுப்படுத்த முடியவில்லையே. ஆசை என்ன, பிரமாத ஆசை; இங்கிலீஷ் சினிமா ஆசை, ஜே. ராமன் போற்றி ஹோட்டல் டிபன் ஆசை. அப்போதைக்கு அவ்வளவுதான் என் ஆசைகள்.

காலையில் மாமி வெறும் காப்பி கொடுப்பாள். ஒன்பது மணிக்கெல்லாம் டிபன், மத்தியானம் ஒரு மணிக்குச் சாப்பாடு, சாயங்காலம் பின்னும் ஒரு காப்பி, இரவில் மீண்டும் ஒரு சாப்பாடு. தூக்கம் — ஒரு சமுக்காளம், ஒரு தலையணை, ஒரு போர்வை. இவையும் மாமா மாமியின் உபயம்தான். என்னுடைய உடைகள் —

ஊரிலிருந்து கொண்டு வந்த பழைய அரைக் கைச் சட்டைகள். பழசும் புதுசுமாக



நாலைந்து வேட்டிகள். இங்கே வந்து தைத்துக் கொண்ட இரண்டு ஸ்லாக்குகள். முதன் முதலாக அப்போதுதான் நான் ஸ்லாக் சட்டைக்காரனானேன். நாகர்கோயில் வரும் போது என் தகப்பனார் பத்து ரூபாய் கொடுத்தார், 'சட்டை தைத்துக் கொள்' என்று. அந்தப் பணத்தில் இரண்டு ஸ்லாக்குகளுக்குத் துணி வாங்கியபின் ஒன்றேகால் ரூபாய் மிஞ்சிற்று. இரண்டு ரூபாய் கூலி கேட்ட தையற்காரனிடம் கையிலிருந்த ஒன்றே காலைக் கொடுத்து விட்டு முக்கால் ரூபாய் பிறகு கொண்டு வந்து கொடுப்பதாகச் சொல்லி விட்டு மடமட வென்று தைத்த புதுச் சட்டைகளுடன் வீடு திரும்பி வந்தேன். நல்ல வேளை; என் விலாசத்தை அவனுக்குத் தெரிவிக்க வில்லை. ஆனால் அவனை ஏமாற்றும் உத்தேசம் எனக்குக் கிடையாது. கையில் காசு வரும் போது கடனைத் தீர்த்துவிட வேண்டும் என்பதே என் தீர்மானம். ஆனால்

கையில் காசு வரவில்லை. எப்படி வரும்? பையன் சம்பாதித்துப் போட்டு முழு வயிற்றுக்குச் சாப்பிடும் நாள் என்று வரும் என்று பேராசையுடன் நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு காத்திருந்த என் தகப்பனாரிடம் நான் பணம் கேட்க முடியாது. என்று அவர் எனக்குப் பத்து ரூபாய் கொடுத்தாரோ, அன்றே அவர் உடம்பில் கணிசமாக எடை குறைந்து விட்டிருக்கும்.

ஒவ்வொரு நாள் மாலையும் நான் சாரதா டாக்கீஸுக்குப் போவேன். படம் பார்க்க முடியாமல் என் போல் வெளியே ஏங்கித் துவண்டு நிற்கும் பேர்வழிகளைக் கொஞ்சம் திருப்திப்படுத்துவதற்காகத் தானோ என்னவோ அந்தத் தியேட்டரிலிருந்து ஒலி பெருக்கி மூலம் பாட்டுக்களை முழக்கித் தள்ளிக் கொண்டிருப்பார்கள். சினிமா தொடங்குவது வரை—ஓர் அரை மணி நேரம் — ஜாலியாகப் பாட்டுக்கள் கேட்டுவிட்டு, சினிமா சுவரொட்டிகளைப் பார்த்துப் பெருமூச்செறிந்து விட்டு வீடு திரும்புவேன்.

தியேட்டர் வாசலில் போய் நின்றது போல் ஜே. ரமன் போற்றி ஹோட்டல் வாசலில் போய் நின்று ரவா தோசையையும் வெங்காய பஜ்ஜியையும் நான் மோப்பம் பிடிக்க முடியாதல்லவா?

சுயம்புலிங்கம் ஒவ்வொரு நாளும் என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதுபோல் மேற்படி ஹோட்டல் ஸ்பெஷலைப் பற்றி என்னிடம் அளந்து அளந்து பரவசப்பட்டுக் கொண்டே இருந்தான். அவன் நரகத்தின் அடித்தளத்துக்கு நிச்சயம் போவானல்லவா? சரி, போகட்டும்.... நான் என்ன செய்ய? நிராசைகளில் வாழ்வதைத் தவிர வேறு எதுவும் நான் செய்வதற்கில்லையே! ஆனால் குஷியான பல சொப்பனங்களை மனதில் சிருஷ்டித்து மயங்கிக் களிப்படைந்தேன். வீட்டில் கொல்லைப் பக்கத்திலிருந்து புதையல் கிடைப்பதாகவும், கள்ள நோட்டுகள் என் முன் மலை மலையாய்க் குவிவதாகவும், சுப்பிரமணிய மாமா என்னைச் சுவீகாரம் செய்து கொள்வதாகவும்... இப்படி வெகு ஜோரான சொப்பனங்கள்.

இப்படி இருக்கும் போதுதான் ஒரு நாள் ஆனந்தவல்லி மாமியின் உண்டியல் பெட்டியை என் கண்கள் காண நேர்ந்தன. ஆ, அந்த வேளையை என்ன என்பேன்! நடுக் கூடத்திலிருந்த பாத்திர அலமாரியில், மேல் தட்டின் ஒரு கோடியில் அந்தப் பெரிய மர உண்டியல் பெட்டியை மாமி வைத்திருந்தாள். 'டொங்க் டொங்க்' என்று நாலைந்து நாணயங்களை அந்தப் பெட்டியில் போட்டு விட்டு அலமாரியைப் பூட்டி, சாவியை சாவித் துவாரத்திலேயே விட்டு விட்டு அசைந்து அசைந்து மாமி நடந்து போனதை அன்று நான் கவனித்தேன். அந்தக் கணத்தில் என் நெஞ்சினுள் ஒரு கூடை ரோஜா இதழ்கள் பொல பொல வென்று உதிர்ந்தன. சாவி, சாவித் துவாரத்திலேயே விடப்பட்ட அலமாரியினுள் இருந்த உண்டியல் பெட்டி எனக்கு எப்படிப் பயன்படும் என்பதுபற்றி நான் யோசிக்கத் தேவையில்லை. ஓர் உண்டியல் பெட்டியை உண்டியல் பெட்டி — தர்மம் குலையா வண்ணம் பயன்படுத்திக் கொள்ளும் பாரம்பரியம் ஏற்கனவே எனக்கு இருந்தது: என் அம்மாவின் ஓவல் டின் டப்பா உண்டியலிலிருந்தும், என் பாட்டியின் மண் சட்டி உண்டியலிலிருந்தும் அரையணா காலணா என்று அபேஸ் செய்து வேர்க்கடலை வாங்கித் தின்ற நாட்கள் நினைவில் மலர்ந்தன.

மேற்படி உண்டியல் பெட்டி பொன் முட்டையிடும் வாத்து என வந்து வாய்த்தது. அன்று சாயங்காலம் கல்லூரியிலிருந்து வீடு வந்து, வெளியே எங்கும் செல்லாமல் மாடியில் உட்காரத் தரியாமல் குறுக்கும் நெடுக்குமாய் நடந்து கொண்டிருந்தேன், மாமி கோயிலுக்கு எப்போது போவாள் என்று எதிர் பார்த்தபடி. போகும் போது, ''ஏண்டா, தினம் சாயங்காலம் ஊர் சுத்தப் போவியே, இன்னிக்குப் போகலியா?'' என்று கேட்டாள் மாமி. ''இல்லை. அப்பாவுக்கு லெட்டர் எழுத வேண்டியிருக்கு. நீங்கள் வந்த பிறகு வெளியே போகிறேன்'' என்றேன்.

''சரி, வீட்டைப் பார்த்துக்கோ; வாசல் திறந்திருக்கு'' என்று சொல்லிப் போனாள் மாமி. மறு நிமிஷம் நான் பரபரவென்று கீழே இறங்கி வந்து முன் வாசல் கதவை நன்றாக அறைந்து தாழ்ப்பாள் போட்டு விட்டுக் கூடத்துக்கு விரைந்தேன். சாவி சாவித் துவாரத்திலிருந்தது. அம்மாடி, உண்டியல் பெட்டிதான் என்ன கனம்! காசை வெளியே கொண்டு வரவேணுமானால் பெட்டியைக் கவிழ்க்க வேண்டும். கவிழ்க்கையில் கலகலவென்று மரப் பலகைச் சுவர்களில் மோதி நாணயங்கள் எழுப்பிய ஓசை - 'சோ' வென்ற பெரு ஓசை என்னுள் ஒலித்து என்னைத் திகிலுறச் செய்தது.

ஒரு தென்னை ஈர்க்குச்சியால் அல்லது ஒருபுறம் அகன்று மறுபுறம் குறுகிய ஒரு கிராப்புச் சீப்பால் ஓர் உண்டியலிலிருந்து நாணயங்களை வெகு சுலபமாக வெளியே தள்ளிவிட முடியும்.

அன்று நான் தென்னை ஈர்க்குச்சியின் உதவியால் ஒரே பிரயோகத்தில் எட்டணா நாணயம் ஒன்றை முதலில் விடுதலை செய்தேன். மேலும் ஒரு நாலணா அப்போது தேவை என்று படவே ஆயுதத்தை மீண்டும் உள்ளே செலுத்தினேன். மூன்று காலணாக்களும் இரண்டு நாலணாக்களும் கலகல வென்று இலக்குமி தேவியின் சிரிப்பொலி போல் சிதறின. மகிழ்ச்சி மிகுந்த அச்சத்துடன் நாணயங்களைப் பொறுக்கினேன். அப்போது நான் செய்யும் காரியத்திலுள்ள நியாய — அநியாயங்கள் பற்றிச் சிந்தனை என்னுள் சுறுசுறுப்படைந்தது. நேர்மைக்கும் நாணயத்துக்கும் பெயர் போன குடும்பத்தைச் சேர்ந்த நான் இப்படிச் செய்வது சரியான காரியம்தானா என்று யோசித்தேன். இப்படி யோசித்த மறு கணமே அற்புதமான ஒரு நியாயம் என் மூளையில் சுடர் விட்டது. அந்த நியாயத்தின்படி பின் வருமாறு செய்வதென்று தீர்மானித்தேன். எனக்குத் தேவைப்படும்போதெல்லாம் ஆனந்தவல்லி மாமியின் உண்டியல் பெட்டியிலிருந்து பணம் எடுத்துக் கொள்ள வேண்டியது. பின்னால் எத்தனை சீக்கிரத்தில் முடியுமோ அத்தனை சீக்கிரத்தில் படிப்பு




உடல் வளைவுகளுக்கேற்றப்போல் அமுக்கப்பட்ட ஆசனமும், முதுகுச்சாய்மானமும் மகிழ்ச்சியூட்டும் வசதியை அளிக்கக்கூடிய உறுதியான எஃகு குழாயினால் செய்யப்பட்ட உலோகப் பாகங்களெல்லாம் வாட்டி யெடுக்கும் முறையில் எனுமல் பூசப்பட்டுத் துருப் பிடிக்காமல் செய்யப்பட்ட நாற்காலியை வாங்குங்கள்.

## சிறந்த தரத்தில்-அடுக்கடுக்காக

- ஒவ்வொரு உலோகப் பகுதியும் 'பாஸ்பரைஸ்' செய்யப்பட்டது. துருப்பிடிக்காமல் வாட்டி எனுமல் பூசப்பட்டது.
- ஆசனம் மற்றும் முதுகுச் சாய்மானத்தின் அமைப்பு அதிக வசதியை அளிக்கிறது.
- ஈரத் துணியைக்கொண்டே துடைத்து எளிதில் சுத்தமாகவைத்துக்கொள்ளலாம்.
- மடக்குவதற்கு விசேஷ அமைப்பு.
- வழுக்கிவிடாத, தரையைக் கீறாத, ரப்பர் அடிகள் கொண்டது.
- பல்வேறு வர்ணங்களில் கிடைக்கக் கூடியது.




**ஆயிரம் காலம்**
**ஆள்வதற்கு**



*தயாரிப்போர்:*
**க்ரோம் லைட் (இந்தியா) பிரைவேட் லிட்.**
*பி-35 இந்தியா எக்ஸ்சேன்ஜ் ப்ளேஸ், கல்கத்தா-1*

முடிந்து நான் அந்த வீட்டை விட்டு வெளி யேறுவதற்கு முன் எப்படியாவது பணம் சம்பாதித்து எடுத்த பணத்தை உண்டியல் பெட்டியினுள் திரும்பப் போட்டுவிட வேண்டும். ஒரு கீதை வாக்கியம் போல் இந்தச் சிந்தனை என் உள்ளத்தில் எதிரொலித் தது. ஆ! நான் நேர்மையும் நாணயமும் நிறைந்த குடும்பத்தில் பிறந்தவன்!

பொறுக்கியெடுத்த சில்லறையிலிருந்து ஓர் எட்டணாவையும், ஒரு நாலணாவையும் மட் டும் எடுத்துக்கொண்டு மிகுந்திருந்தவைகளைப் பெட்டியினுள்ளேயே போட்டுவிட்டேன்.

பெட்டியை உரிய இடத்தில் வைத்து விட்டு அவசர அவசரமாக மாடிக்குத் தாவி ஓடினேன். ஒரு சட்டைக்குள் உடம்பை நுழைத்துக் கொண்டு மாமியின் வரவை ஆவலோடு எதிர் நோக்கி நின்றேன். ஜே. ராமன் போற்றி என்ற மாபெரும் மனிதனை யும் அவருடைய அரிய படைப்புக்களையும் அன்று என்பால் தன் கருணை மழைத் துளி களைச் சிறிது சிதறவிட்ட எல்லாம் வல்ல கடவுளையும் தியானித்து நின்றேன். அன்றி ரவு வீட்டில் எனக்குச் சாப்பாடு கிடை யாது. அன்றிரவு நான் ஜே. ராமன் போற்றி யின் விருந்தாளி.

சில நிமிஷங்களில் மாமியும் கோயிலி லிருந்து திரும்பி வந்து சேர்ந்தாள்.. அவ ளிடம் அப்பா கடிதத்தைத் தபாலில் சேர்க் கப் போவதாகக் கூறி வெளியே பறந்தேன்...

அடே, சுயம்புலிங்கம்! நீ சொன்னது நிஜம்தானடா! என்ன ரவா தோசை என்ன பஜ்ஜி, என்ன ஜே. ராமன் போற்றி!

சாரதா டாக்கீஸில் இங்கிலீஷ் படங்கள் ஏராளமாகத் திரையிடப்பட்டன.

ஜே. ராமன் போற்றி ஹோட்டலில் நான் தவறாமல் ரவா தோசைகளும், வெங்காய பஜ்ஜிகளும் கடச் கடத் தயாரிக்கப்பட்டன.

அநேகமாக எல்லா இங்கிலீஷ் படங்களை யும் ஐந்தரையணா பெஞ்சில் அமர்ந்து நான் கண்டு களித்தேன்.

உண்டியல் பெட்டி வைக்கப்பட்டிருந்த அலமாரியின் சாவி என்றும் சாவித் துவாரத் திலேயே இருந்தது. மாமி நான் தவறாமல் கோயிலுக்குப் போய் வந்தாள்!

'இதோ' என்று தொடங்கிய பி. யூ.ஸி. வருஷம் 'அதோ' என்று முடிந்துவிட்டது. நாட்கள் பறந்த வேகத்தை எண்ணி வியப் படையாமல் இருக்க முடியவில்லை.

மார்ச் மாதக் கடைசியில் பரீட்சை முடிந்து கிராமத்துக்குப் போனேன்.

எப்போதும் போல் அப்பா தன் பஞ்சப் பாட்டுக்களை உச்ச ஸ்தாயியில் பாடினார். அப்போது பஞ்சமத்தில் ஏறிப் பாடினார் என்று சொல்லலாம். பண்ணையார் மாமா வீட்டில் கணக்குப்பிள்ளை உத்தியோகம் பார்த்து அவர் சம்பாதித்த இருபத்தைந்து ரூபாயில் குடும்பத்தின் மிகக் குறைந்த பட்சத் தேவைகளைக் கூடச் சமாளிக்க முடி யாமல் அப்பா பட்ட பிராணவஸ்தையின் ஓலம் என் நெஞ்சைப் பிளந்தது.

''இந்த நிமிஷமே நீ ஏதாவது வேலைக்குக் கிளம்பினால் தேவலை என்றிருக்கிறது. உடுக்க முழுசாக ஒரு புடவை இல்லாமல் உன்




''உங்க ஹோட்டல்லே இருக்கிற இவ்வளவு புகையை ஆளுக்குக் கொஞ்சம் புடிக்கக்கிட்டுப் போகட்டுமே கொறஞ்சா போயிடும். புகை பிடிக்கக் கூடாதுன்னு போர்டு வேறே போட் டிருக்கீங்களே !''

அம்மா....'' இப்படி அப்பா சொல்லத் தொடங்கியபோது என்னும் உணர்ச்சி வசப் பட்டுக் கண்ணீர் சிந்தாமல் இருக்க முடிய வில்லை. முன்பு அப்பா எனக்கு எழுதியிருந்த ஒன்றிரண்டு கடிதங்களில் கூட வீட்டின் நிலைமையைச் சூசகமாகக் கோடி காட்டி யிருக்கவில்லையா?

''சரி'' என்றேன்.

''சுப்ரமண்ய மாமா கிட்டே சொல்லு. ஒரு வேலை பார்த்துக் கொடுப்பார். அவர் தான் நமக்குத் தெய்வம். அவர் கடையிலேயே...''

''சரி சரி'' என்றேன்.

இரண்டொரு மாதங்களில் பி. யூ. ஸி. பரீட்சை முடிவு வெளியாயிற்று. என் எண்ணும் இன்னும் பல எண்களும் வெளி வராமல் மறைந்தன. நான் கோட்!

''எங்காவது எனக்கு ஒரு வேலை பார்த்துக் கொடுங்கள் மாமா'' என்றேன் மாமாவிடம்.

''தோற்றுப் போனது பற்றிக் கவலைப் படாதே. தொடர்ந்து படி. நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றார் மாமா.

அப்பா சொன்னது போல் அவர் தெய்வம் தான்.

''இல்லை மாமா; எப்படியும் நான் வேலை பார்த்தாக வேண்டும். மேலே படிக்க எனக்கு இஷ்டமில்லை'' என்றேன் நான் கருக்கமாக.

அவரும் என்னை வற்புறுத்தவில்லை.

''சரி, பார்ப்போம்'' என்றார்.

'சரி பார்ப்போம்' என்று சொல்லி ஒரு மாதம் கூட ஆகவில்லை. அதற்குள் எனக்கு வேலைக்கு உத்தரவு வந்து விட்டது. டைரக் டர் குழுவில் மாமாவும் அங்கத்தினராக இருந்த ஏழு கிளைகள் கொண்ட ஒரு பாங் கின் நாகர்கோயில் கிளையில் எனக்கு வேலை. சம்பளம் நூற்றிருபது வந்தது.



''நீங்கள் அனுப்பின கடிதம் தானே? அதைப் பற்றிக் கவலே வேண்டாம். என் கிட்டேயே பத்திரமாக இருக்கு. இதோ...''

நான் தன்யனுனேன். குறிப்பிட்ட நாளில் கிராமத்திலிருந்து நாகர் கோயிலுக்குப் போய் வேலேயை ஒப்புக்கொண்டேன்.

சுப்பிரமணிய மாமாவும், ஆனந்தவல்லி மாமியும் என்னே மனமார ஆசீர்வதித்தார்கள். எல்லாமே அவர்களுடைய ஆசிதான். உள்ளூரிலேயே வேலேயாகிவிட்டதால் தங்கள் வீட்டிலேயே தொடர்ந்து தங்கியிருக்கும்படி உத்தரவிட்டுவிட்டார் மாமா. மாமா எவ்வழி அவ்வழி மாமி. பெருந்தன்மையில் இருவருக்கும் எப்போதுமே ஓர் இரகசியமான போட்டி.

முதல் சம்பளம் வந்ததும், வந்த மறு கணமே மிக முக்கியமான ஒரு செலவு நான் செய்ய வேண்டியவனுக இருந்தேன்.

உண்டியல் பெட்டிக் கடனே நான் தீர்த்தாக வேண்டும். எடுத்த சில்லறைகளுக்குக் கணக்கு எழுதி வைத்துக் கொள்ள ஒரு முறைகூட நான் தவறவில்லே. எல்லாவற்றையும் கூட்டிப் பார்த்ததில் ஐம்பது ரூபாய் பதின்மூன்று வந்தது.

அன்று மாலே முதல் மாதச் சம்பளத்துடன் நான் மாமா வீட்டுக்குத் திரும்பியபோது என்னிடம் ஐம்பத்தோரு ரூபாய்க்கு முழு ரூபாய் நாணயங்கள் இருந்தன.

மாமி வெளியே போகும் சுப முகூர்த்த வேளேயை எதிர் நோக்கிக் காத்திருந்தேன். என் நெஞ்சினுள் ஒரு வகை நிம்மதியும், பெருமிதமும் களேகட்டிற்று. அந்த நாள் என்றும் நான் மறக்க முடியாத நாள்.

வழக்கம் போல் கோயிலுக்குப் போய் வருவதாகக் கீழேயிருந்து குரல் கொடுத்தாள் மாமி. பணத்துடன் வேகமாக நான் கீழே இறங்கி வந்தேன். அலமாரியைத் திறந்து பெட்டியை எடுத்துத் தரையில் வைத்து ஒவ்வொரு ரூபாயாகத் துவாரத்தின் வழி 'டங் டங்' என்று உள்ளே இடலானேன். பெரும் பகுதி போட்டு முடிந்து ஐந்தோ ஆறோ நாணயங்கள் கையிலிருந்த போதுதான் அந்த மாபெரும் வேடிக்கை நிகழ்ந்தது. இலேசான கால் அரவம்; என் உடம்பெல்லாம் ஒரு சில்லிடல்; ஒரு பீதிச் சிலிர்ப்பு. வீட்டினுள்ளே இருந்து ஆனந்தவல்லி மாமி திடுமென்று நடுக்கூடத்தில் என் முன் பிரசன்னமானுள். நிலேகுலேந்து நான் எழுந்து நின்றேன். அப்படியானுல் மாமி கோயிலுக்குப் போகவில்லே. போகப் புறப்பட்டவள் ஏதோ காரியம் நினேவுக்கு வந்து வீட்டுக்குள் திரும்பி வந்திருக்க வேண்டும்.

மாமியின் முகம் அப்போது மாறிய விதத்தை என்னுல் சொல்ல முடியவில்லே. ஒரே பார்வையில் என்னே நொறுக்கி எறிந்து விடுவது போல் நோக்கி நின்றுள். ஆனந்தவல்லி மாமியின் கண்களுக்கு இப்படிப் பார்க்கும் வன்மையும் உண்டா?

''சீ!'' என்றுள் மாமி. அந்தச் சீயில் தெறித்த அருவருப்பும் வெறுப்பும் என் மான உணர்வின் உயிரையே பறித்தெறிந்தன. பேசுவதற்கு நாவை இயக்க முயன்றேன். முடியவில்லே. என் உடல் — இயந்திரம் ஒரு மின் தாக்குதலில் பழுதுற்று நின்றது போலாகி விட்டது. ஒருவாறு என்னேக் கட்டுப்படுத்திக்கொண்டு கையில் மிருந்திருந்த நாணயங்களேப் பெட்டியினுள் தள்ளி விட்டு மாடிக்குப் போனேன். என் துணிமணிகளேக் கூட்டிச் சேகரித்து என் காகிப் பையினுள் திணித்தேன். ஒரு சட்டையை மாட்டிக் கொண்டேன். கிழக்குப் பார்த்த ஜன்னல் வழியாகத் தென்னே மரங்களேயும் வானத்தையும் பிறகு நீர் சொட்டிக் கொண்டிருந்த தெருக் குழாயையும் சில விநாடிகள் நோக்கி நின்றேன். பிறகு பரபரவென்று கீழே இறங்கிக் காலில் செருப்பை நுழைத்துக் கொண்டு காகிப் பையும் கையுமாய் வாசல் பக்கம் வந்தேன். மாமி ஒரு தூணில் சாய்ந்தபடி நின்றிருந்தாள். அவளருகே போனேன். குனிந்து அவளது இரு பாதங்களேயும் வணங்கினேன். அவள் வெறுப்புடன் அப்பால் விலகினுள்.

''என்னடா, நாடகம் காட்டறே. என் முகத்திலே விழிக்காதே. உன்னேப் பார்க்கிறதே பாவம்....''

''மாமி....'' என்று பேச வாயெடுத்தேன். என்ன சொல்வதென்றே தெரியவில்லே. அப்போது என் நிலேயை விளக்கவும் எனக்குப் பிடிக்கவில்லே. ''உங்களுக்கும் மாமாவுக்கும் நான் ரொம்பக் கடமைப்பட்டிருக்கேன். அதோடே....'' என்று இழுத்துவிட்டு, சட்டென்று ''நான் போய் வருகிறேன்'' என்று சொல்லி முடித்துவிட்டுத் தெருவை நோக்கி நடந்தேன்.

போகிற வழியில் அந்தத் தையல்காரனிடம் சென்று அவனுக்கு முக்கால் ரூபாய் கொடுத்துத் தாமதத்துக்குக் காரணம் கூற முற்படாமல் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு கிராமத்துக்குச் செல்லும் ஏழு—இருபது பஸ்ஸைப் பிடிக்க விறுவிறுவென்று நடந்தேன்.

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவறாமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ்வெளிய பழக்கத்தினால் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.

எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.






மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

ECHO.G.A.TAM.

அத்தியாயம் நாற்பத்து மூன்று

## பரமேசுவர கிருகம்

"கலைஞரே, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? கூரத்தில் கட்டப் பெற்ற அந்த இல்லம் உங்களுடையது இல்லையா?" என்று அடக்க முடியாத துடிப்புடன் கேட்டான் பரமேசுவரவர்மன்.

புன்னகை தவழ அவனைப் பார்த்த பரவாதிமல்லர், "எனக்கென்று ஓர் இல்லம் இருக்க வேண்டுமென்று நான் என்றுமே ஆசைப்பட்டதில்லை, அரசே! அப்படி இருந்த இல்லத்தையும் சளுக்கியர்கள் இடித்துத் தரை மட்டமாக்கியதை நேருக்கு நேர் பார்த்தபோதுகூட அதற்காகச் சிறிதும் கவலைப்படவில்லை. ஏனென்றால் என் கண்ணுக்கு இவ்வுலகமே ஓர் இல்லமாகத்தான் தென்படு



றெது. இந்த அழகிய விசாலமான இல்லத்தில் குடியிருந்து வரும் நான் ஏன் இன்னொர் இல்லத்துக்கு ஆசைப் பட வேண்டும்?'' என்று மிக மிக அமைதியாகக் கூறினார்.

பரமேசுவரவர்மனின் ஆவல் மேலும் வளர்ந்தது. ''அப் படியானால் அந்தக்

# ஜகசிற்பியன்

கூரம் கிருகத்தை யாருக்காக நிர்மாணித்தீர்கள், கலைஞரே?''

''பல்லவ நாயகரின் பெயரில் உலக நாயகருக்காக அதைக் கட்டி முடித்திருக்கிறேன்!'' என்று மகிழ்ச்சிப் பரவசத்துடன் சொன்ன பரவாதிமல்லர் தம் கண்களை மெல்ல மூடியவாறு மேலும் கூறினார்: ''மறைந்த மாமன்னர் நரசிம்மவர்மரின் திருப் பெயரை இந்த நானிலம் என்றுமே மறக்காதிருக்கும் வகையில் மாமல்லபுரத்திலே பல அற்புத கற்கோயில்களைச் சமைத்துத் தந்தான். எனது பேரன்புக்கும் பெருமதிப்புக்கும் உரியவரான பரமேசுவரவர்மரின் பெயரையும் அவ்வாறே அழியாச் சிறப்புடையதாக்கிவிட வேண்டுமென்று ஆசைப்பட்டேன். என் ஆசைக்குக் கலைத் தேவியும் அருள்பாலித்து அரியதொரு வரம் வழங்கினாள். புத்தம் புது கலைக் கனவு ஒன்று கண்டேன். தமிழகத்துக்கு முற்றிலும் புதியதான அந்தக் கலைக் கனவை நனவாக்கி நிலைபெறச் செய்துவிட ஆவேசம் கொண்டேன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக என் கலையாவேசத்தைச் சளுக்கியர்கள் படையெடுத்து வந்து கலைத்து அழித்து விட்டார்கள். அதனால் விடியற்போதை எதிர்நோக்கி ஓலமிடும் செம்போத்துப் பறவையைப்போல் உள்ளம் குமைந்து உற்சாகம் குன்றித் தவிக்கலானேன். கால தேவன் கண் திறந்தான். பல்லவ நாட்டைக் கப்பியிருந்த அடிமை இருள் அகன்றது. சுதந்திரச் சூரியன் உதயமாயிற்று. நீறு பூத்த நெருப்பாக என் நெஞ்சத்தில் புதைந்து கிடந்த அந்தப் புதுக் கலைக் கனவும் புத்துயிர் பெற்று எழுந்தது. அப்போது தான் மன்னரவர்கள் வந்து, எனக்கு என்று கூரத்தில் ஓர் இல்லம் அமைத்துக் கொள்ள முற்றூட்டுச் சாஸனம் எழுதிக் கொடுத்தார். என் சிந்தனை தீவிரமாகியது. திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தேன். எனக்குக் கிடைத்த முற்றூட்டை — அதன் நோக்கத்துக்குப் புறம்பாக — எனது மாபெரும் கலைக் கனவை நனவாக்குவதற்கெனப் பயன்படுத்திவிடுவது என்னும் முடிவுதான் அது. அந்த முடிவுக்கு வந்த அன்றே என்னை மறந்தேன்; உலகை மறந்தேன்; என் அன்புக் கோமான் பரமேசுவரவர்மரின் நெஞ்சில் நின்றுலாவும் நித்திய பரம்பொருளாம் நிமல நாதனுக்குப் புத்தம் புது வடிவில்—தமிழகம் இதுவரை கண்டிராத முறையில் — கற்றளி ஒன்று சமைக்க ஆரம்பித்தேன். சுட்ட செங்கல்லையும், சுண்ணக் கலவையையும், மண்ணையும் மரத்தையும் கொண்டு உருவான மண்டளிகளிலும், பாறையைக் குடைந்து படைத்த குகைக் கோயில்களிலுமே இதுகாறும் எழுந்தருளி வாசம் செய்த எம்பிரான் நீலமணி மிடற்றுடையானுக்கு முழுக்க முழுக்கக் கருங்கற்களாலான கண் கவர் கற்கோயில் ஒன்றை உருவாக்கித் தந்து, தமிழக சேதியக் கலையில் ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவிக்க முற்பட்டேன். என் கனவு பலித்தது; என் ஆசை கைகூடியது. காலத்தை வெல்லும் கலையொன்றைத் தமிழகத்துக்குக் கற்றுத் தந்து விட்டேன். இனி இம்முறையைப் பின்பற்றித் தென்னகமெங்கும் ஒன்றல்ல, பத்தல்ல, ஆயிரமாயிரம் கற்கோயில்கள் ககனத்தை அளாவி எழும்பி நிற்கும். அவை இந்த யுகத்துக்கு மட்டுமல்ல, இனி வரப் போகும் பல யுகங்களுக்கும் தமிழரின் சேதியக் கலை ஞான வெற்றிச் சின்னங்களாக விளங்கும். அப்படி விளங்கக் கூடிய கோயில்களுக்கெல்லாம் ஒரு மூல மாதிரிச் சின்னமாக உருவாகியிருக்கும் அந்தக் கூரம் கோயிலுக்கு — என்னை இதுகாறும் உளமார நேசித்து என் கலைத் திறனை உண்மையாக மதித்துப் போற்றி ஆதரவு நல்கி வரும் பல்லவச் செல்வர்பால் நான் கொண்டுள்ள அன்புக்கும் விசுவாசத்துக்கும் நன்றியறிதலுக்கும் அடையாளமாக அவருடைய திருப் பெயரையே— அதாவது, 'வித்யா விநீத பல்லவ பரமேசுவர கிருகம்' என்று சூட்டியிருக்கிறேன். எனவேதான் அரசரவர்கள் அந்தக் கோயிலை நேரில் வந்து பார்வையிட்டு அதன் குடமுழுக்கு விழாவையும் அவரே முன்னின்று நடத்தி வைக்க வேண்டும் என்று விரும்பியும் வேண்டியும் கொள்கிறேன்.''

உணர்ச்சிப் பெருக்கால் தொண்டையடைத்துக் கொள்ளவே சற்று நேரம் திக்கித் திணறவிட்ட பரவாதிமல்லர், மெல்லக் கண் திறந்தார்.

பரமேசுவரவர்மன் எங்கே? மாபெரும் பல்லவ சாம்ராஜ்யத்தின் மகா சக்கரவர்த்தியான அவன், தன்னை மறந்த நிலையில் அந்த எளிய சேதியக் கலைஞரின் எதிரே முழந்தாளிட்டு அவரை அப்படியே அணைத்துத் தழுவிக் கொண்டிருந்தான்!

திடுக்குற்று நடுங்கிய பரவாதிமல்லர் அவனை அவசரமாகத் தூக்கி நிறுத்தி விட்டுப் பின்னால் நகர்ந்தார். ஒளி பொருந்திய அவரது கண்களிலிருந்து மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கெடுத்தது.

''கலைஞர் பெருமானே! என்னுடையவும் என் நாட்டினுடையவும் பெருமையை உயர்த்துவதற்காகத் தாங்கள் செய்த இந்த மகத்தான காரியத்தை முன்னதாகவே என்னிடம் தெரிவிக்

திருக்கலாமே? அப்படித் தெரியப்படுத்தாமல் அதை ஏன் இத்தனை இரகசியமாக மூடி மறைத்தீர்கள்?" என்று உள்ளார்ந்த கவலையுடன் வினவினான் பரமேசுவரவர்மன்.

சேதியக் கலைஞர் இதைக் கேட்டு இளநகை புரிந்தார். "பல்லவ நாடு விடுதலைப் போரில் வெற்றியடைந்ததுமே ஒரு நல்ல சந்தர்ப்பச் சூழ்நிலையில் அந்த விஷயத்தைத் தங்களிடம் தெரிவித்து அநுமதி பெற்றுச் செயலில் இறங்க வேண்டும் என்றுதான் முதலில் திட்டமிட்டிருந்தேன், அரசே! ஆனால் எதிர்பாராத விதமாகப் பழையாறைச் சோழரும் கோவிந்தவர்மரும் சேர்ந்து நாட்டிலே சமயப் பூசலைக் கிளப்பிவிட முற்பட்டதை அறிந்ததும் என் திட்டத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதாகி விட்டது. காரணம், அவர்கள் பரப்பி வந்த துவேஷப் பிரசாரத்தினால் சைவர்களைவிட சமணர்களே மிகவும் கொதிப்படைந்திருந்தார்கள். அந்நிலையில் சமணனாகிய நான், சைவ சமயத்தின் முழு முதற் தெய்வத்துக்கு அரசாங்கப் பணச் செலவிலே கற்கோயில் எடுப்பிப்பதைச் சமணர்கள் சகித்துக் கொள்வார்களா? சைவர்களேகூட அதைச் சரியான நோக்கில் பார்த்து என்னை நம்பவும் ஆதரிக்கவும் மாட்டார்களே! எனவேதான் கூரத்தில் அந்தக் கோயிலைக் கட்டி முடிக்கும் வரை அதை யாரும் அறிய விடாமல் மூடி வைப்பதென முடிவு செய்தேன்."

இவ்வாறு சொன்ன பரவாதிமல்லர் எதையோ நினைத்துக் கொண்டவராய்ச் சட்டென்று நிமிர்ந்து தழுதழுத்த குரலில் கூறினார்: "'நாட்டு நிலைமை இத்தனை மோசமாக இருக்கும்போது அவசரப்பட்டு அந்த முயற்சியில் ஏன் ஈடுபட வேண்டும்? எல்லாம் சரியான பின் அமைதியாக ஆரம்பித்திருக்கலாமே?' என்று அரசவர்கள் கேட்கலாம். நானும் முதலில் அப்படித்தான் நினைத்தேன். ஆனால் என் முதுமைப் பருவம் எனக்குரிய எதிர்காலத்தை மிகக் குறைந்த அளவிலேயே வைத்திருப்பதாக எனது உள்ளுணர்வு என்னை எச்சரித்தது. காலம் என் கணக்கைத் தீர்க்குமுன் காலத்தின் முதுகிலே என்னுடைய மகத்தான கலைக் கனவை நனவாக்கிப் பொறித்துவிட வேண்டும் என்று எழுச்சியுற்றேன். என்னைப்பற்றி யார் எத்தகைய தவறான பிரசாரம் செய்தாலும் அதைப் பல்லவ மாமன்னர் கடுகளவும் நம்ப மாட்டார் என்ற நம்பிக்கை எனக்குப் பூரணமாக இருந்தது. அந்த நம்பிக்கையில் பிறந்த துணிவினால்தான் என் முயற்சியில் முழு மூச்சுடன் இறங்கி வெற்றிகரமாக முடித்தும் விட்டேன். இப்போது நான் மகிழ்ச்சியடைவதெல்லாம் என்னுடைய மாபெரும் சாதனைக்காக அல்ல; என்மீது தேச மக்கள் பல விதமான சந்தேகங்கள் கொண்ட நிலையிலும் மன்னரவர்கள் அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் நான் கேட்டபோதெல்லாம் எவ்விதக் கணக்கும் இன்றி ஏராளமான நிதி வசதிகளை—அவை என் சொந்த இல்லம் கட்டுவதற்குத் தேவை என்றே எண்ணி—வாரிவாரி வழங்கிக் கொண்டிருந்தாரே, அதை நினைத்துத்தான் எல்லையற்ற ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைகிறேன்; இத்தகைய பேரன்புக்கு நன்றி செலுத்துவதற்கென்றே நான் இன்னும் பல பிறவிகள் எடுக்க வேண்டும் என்றும் விழைகிறேன்."

குளிர்ந்த பார்வையால் அவரையே கூர்ந்து பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் சில விநாடிகளுக்குப் பின், "கலைஞரே! தங்களின் மகோன்னத சிருஷ்டியை இன்றே காண வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். கூரத்துக்குப் புறப்படுவோமா?" என்றவாறு அவரது கரங்களை அன்புடன் பற்றினான்.

பரவாதிமல்லரின் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடியது. ஆனால் மறுகணமே ஒருவித பீதியும் சஞ்சலமும் கொண்டவராய்த் தலைகுனிந்து, "புறப்படலாம், அரசே!....அதற்குமுன் ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ள விரும்புகிறேன்...." என்று அடைத்த குரலில் இழுத்தார். "அதாவது, நான் காஞ்சிக்கு வரும் வழியில் திடுக்கிடும் செய்தியொன்றைக் கேள்விப்பட்டேன். அந்தச் செய்தி என்னை மட்டுமல்ல, தேசம் முழுவதையுமே ஒரு குலுக்குக் குலுக்கி அலைக்கழித்து விட்டிருக்கிறது. ஆயினும் அது உண்மையாக இருக்குமா என்று சந்தேகமாகவும் இருக்கிறது."

"கலைஞர் கேள்விப்பட்ட அந்தச் செய்தி என்னவோ?" என்று அமைதியாக வினவினான் பரமேசுவரவர்மன்.

"அதை என் வாயால் சொல்லவே அச்சமாயிருக்கிறது, அரசே!... அதாவது..... தாங்கள் பல்லவ சாம்ராஜ்யத்தின் மணிமுடியைத் துறந்துவிட முடிவு செய்திருப்பதாக நாடெங்கும் பேச்சாயிருக்கிறது! இதனால் மக்களெல்லாம் இடியோசை கேட்ட நாகம் போல் நடுநடுங்கி விட்டிருக்கிறார்கள்!"

"உண்மையான செய்தியைத்தான் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்."

"அரசே?......"

"ஆனால், அது என் உண்மையான முடிவு அல்ல!" என்று கூறி ஓர் அவலப் புன்னகை பூத்த பரமேசுவரவர்மன்

# அலுவலகப் பணிக்கும் பாதுகாப்புக்கும் என்ன தொடர்பு?

அலுவலகப் பணியை உடனடியாக செய்து முடிப்பது — திட்ட பணிகளை அதிவிரைவாக செயல்படச் செய்யும் — இதனால் அபிவிருத்திக்கு அதிக வளங்களை, பாதுகாப்புக்கு அதிக சாதனங்களும், தளவாடங்களும் கிடைக்கும்.

## நாட்டின் பாதுகாப்புக்கு உங்கள் பணி இன்றியமையாதது.



DA 63/407

நிதானமான குரலில் மேலும் சொன்னான்: "ஆமாம், கவிஞரே! கிரீடதாரியில் பிறந்த நான் கிரீடத்தைத் துறந்து விடுவது என்பது அத்தனை சாதாரண விஷயமல்ல. தாயின் உதரத்தைவிட்டு வெளிவந்த அக்கணமே என் தலையில் சுமத்தப்பட்ட அந்தக் கிரீடச் சுமையை அவ்வளவு எளிதாக என்னால் தட்டிக் கழித்துவிட முடியாது. கடமையை மறந்து பொறுப்பை உதறிவிட்டு ஓடுபவன் கோழை; அப்படிப்பட்ட கோழையுமல்ல நான். சளுக்கியரிடம் பல்லவ நாடு அடிமைப்பட்டுக் கிடந்தபோது அத்தகைய பலவீன எண்ணம் என் மனத்தில் எழுந்ததென்னவோ உண்மைதான். ஆனால், அன்றைய நிலைமை வேறு. இன்று அவ்வாறு கனவிலும் கருத மாட்டேன்; கருதவும் கூடாது. அப்படியாயின் முடி துறக்கப் போவதாக நான் சொன்னதற்குக் காரணம் என்ன? அது ஓர் இராஜ தந்திரப் பரிசோதனை! பொறுப்பற்றவர்களின் பேச்சைக் கேட்டுப் பொறுப்பில்லாமல் நடந்துகொள்ளும் என் தேச மக்களுக்கு ஓர் அதிர்ச்சி மருத்துவம் செய்யவே அத்தகைய திடீர் முடிவு ஒன்றைத் தூக்கிப் போட்டிருக்கிறேன்! என் இதயக் கோமகள் உத்தமசீலியை எனக்கு உரியவளாக்கிக் கொள்வதில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் தடையைத் தகர்த்தெறியவும் அதை ஓர் ஆயுதமாகப் பிரயோகித்திருக்கிறேன்! அதன் விளைவுகளை இப்போது மிகவும் கவனமாகப் பரிசீலித்துக் கொண்டும் வருகிறேன்!"

எங்கோ சென்று விட்டு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தவராய் வழிபாட்டறையின் வழியே அப்போதுதான் வந்துகொண்டிருந்த பெரும்பிடுகு முத்தரையர், பல்லவ மன்னனின் இந்தப் பேச்சைக் கேட்டு அப்படியே வெலவெலத்து நின்று விட்டார்.

இந்தச் சமயம் அரண்மனை வழிபாட்டறையினைக் கண்காணிக்கும் அதிகாரி அங்கு அவசரமாக வந்து, "கவிஞரே! தங்களைக் காண யாரோ ஓர் இளைஞர் வந்திருக்கிறார்" என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே, தலைவிரி கோலமாக அங்கு ஓடி வந்தார் பரவாதிமல்லரின் பிரதம சீடரான புஷ்பசேனர்.

சேதியக் கவிஞரும், பல்லவ மன்னனும் அவரைத் திரும்பிப் பார்த்தனர்.

"குருதேவரே! அநியாயம் நடந்து விட்டது! அக்கிரமம் நடந்தே விட்டது!" என்று குமுறிக் கூவிக்கொண்டு வேர்க்க விறுவிறுக்க வந்து நின்றார் புஷ்பசேனர். "ஆம், குருதேவா! நமது புதிய கிருகத்தைச் சுற்றிப் போடப்



"தண்டவாளத்திலே மேலே எதுக்கு ஸார் நடக்கிறீங்க?"

"வாழ்க்கை கசந்து போச்சு. தற்கொலை பண்ணிக்கப் போறேன்"

"அதுசரி, கையிலே என்ன?"

"ரயில் வர்றதுக்கு நாழியாகும்னு சொன்னாங்க. முறுகலா ஒரு மசால் தோசை பார்சல் கட்டிண்டு வரேன்!"

பெற்றிருந்த கீற்றுப் பந்தலுக்கு யாரோ தீ வைத்து விட்டார்கள்! நேற்று நள்ளிரவில் இந்த நாச வேலை நடந்து விட்டது!"

பரவாதிமல்லர் இதைக் கேட்டுக் கலகலவெனச் சிரித்தார். "அவ்வளவு தானே? பரவாயில்லை!" என்று கூறி மீண்டும் நகைத்த அவர் அலட்சிய பிடுக்குடன் அமைதியாகச் சொன்னார்: "தீ என்ன, வெள்ளமோ புயலோ வந்தாலும் அந்தப் பரமேசுவர கிருகத்தை அசைக்க முடியாது; அழிக்கவும் இயலாது."

"உண்மைதான், குருதேவா! சதிகாரர்கள் இட்ட தீ, கீற்றுப் பந்தலைத் தான் எரித்துச் சாம்பலாக்கியதே தவிர தங்களின் மகோன்னத சிருஷ்டியைத் தீண்டவே இல்லை!..... ஆனால்....."

"என்ன புஷ்பசேனரே?"

"அந்தச் சம்பவத்தை யொட்டி எதிர்பாராத பேராபத்து ஒன்று நேர்ந்து விட்டது, ஐயா!..... அதாவது, திருப்பருத்திக் குன்றத்திலிருந்து தங்களைப் பார்ப்பதற்காக வந்த ஆந்திர இளவரசி உத்தமசீலியார்......"

அக்கினிப் பந்தத்தால் தாக்கப்பட்டவர்போல் துடித்துப் பதறிய பரவாதிமல்லர், ''அவருக்கு என்ன நேர்ந்தது?'' என்று பரபரப்பாகக் கேட்டார்.

''கீற்றுப் பந்தல் தீப் பிடித்து எரிந்தபோது உத்தமசீலியார் கோயிலினுள் இருந்தார், ஐயா! ஊர் மக்களெல்லாம் சேர்ந்து தீயை அணைத்த பின்னும் அவர் கோயிலுக்குள்ளேதான் இருந்து வருகிறார்! உட்புறம் சாத்திய கதவு இன்னமும் திறக்கப்படாமலே இருக்கிறது!''

''ஏன் அப்படி, புஷ்பசேனரே?''

''குருதேவர் மாமல்லபுரத்துக்குப் புறப்பட்டுப் போன மறு நாள் ஆந்திர இளவரசியார் கூரத்துக்கு வந்தார். தாங்கள் திரும்பி வரும் வரையில் தங்களது கூடாரத்திலே தங்கி யிருக்குமாறு அவரை வேண்டிக்கொண்டேன். ஆனால் அவர் பிடிவாதமாக அந்தப் பரமேசுவர கிருகத்தில் இருக்கப் போவதாகச் சொன்னார். மறுக்க இயலாமல் ஒப்புக் கொண்டேன். அன்று மாலை கிருகத்தினுள் சென்று கதவைச் சாத்திக் கொண்டவர், நேற்றோடு இருபது நாட்களாகியும் வெளியில் வரவேயில்லை. ஏதோ காரணமாக அவர் தலைமறைவாக இருக்கிறார் என்று எண்ணி, அவருக்குச் சிரமம் தரக்கூடாதெனப் பேசாமல் இருந்து விட்டேன்...''

''ஆந்திர இளவரசியாரின் பணியாள் நாகோதரன் என்பவன் அவருடனே வந்திருப்பானே? அவனிடம் விவரம் கேட்டீர்களா?''

''அந்த உத்தம வீரன் தன் இளவரசியைக் காப்பாற்ற வேண்டும் என்ற ஆவேசத்தோடு தீ ஜ்வாலைக்கிடையே பாய்ந்து சென்று வெளியேற முடியாமல் வெந்து மாண்டு விட்டான், ஐயா!''

அரண்மனையே கிடுகிடுக்கும்படியான ஒரு பேரொலி —

''உத்தம..... சீலி!''

பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன் எங்கே? அதோ, தன் 'அதிசயம்' என்ற புரவி மீதேறிக் கூரத்தை நோக்கிக் காற்றாய்ப் பறந்து கொண்டிருக்கிறான்.

## அத்தியாயம் நாற்பத்து நான்கு

# மாலை சூட்டினாள்!

அக்கினி தேவனுக்கு இரைப்பு விழா செய்யப்பட்ட அருங்கலைக் கோயில்!

ஆமாம்; வளம் கொழிக்கும் கூரம் கிராமத்தின் ஓரிடத்தில், தீயினால் எரிந்து சாம்பலான கீற்றோலைப் பந்தலின் சவுக்கை மரக் கம்பங்கள் தாறுமாறாகச் சாய்ந்து கிடக்க, அவற்றின் நடுவிலே, மாலை நேரத்தின் மஞ்சள் வெயிலில் பொற் கும்பம் தகத் தகாயமிட்டு ஜொலிக்க, கலையரசியின் மாபெரும் சிம்மாசனம்போல் எழில் மணம் வீசி வானுற ஓங்கி நிமிர்ந்து நின்றுகொண்டிருந்தது, தமிழகத்தின் முதற் கற்கோயிலான வித்யா விநீத பல்லவ பரமேசுவர கிருகம்!

ஆயிரமாயிரம் மக்கள் கூடி நின்று அந்த அதிசயக் கற்கோயிலை வியப்பும் பிரமிப்புமாகக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் அனைவருடைய முகங்களிலும் பல விதமான உணர்ச்சிகள் கொப்புளித்துக் கொண்டிருந்தன.

''நான் நிச்சயமாகச் சொல்வேன்; நேற்றிரவு இந்தக் கூரைப் பந்தலுக்குத் தீயிட்டு நாச வேலை செய்தவர் கோவிந்தவர்மராகத்தான் இருக்கும்'' என்று ஆத்திரத்துடன் சொன்னான் ஊர்க் காவல் அதிகாரி ஒருவன்.

''இதிலென்ன சந்தேகம்? எல்லாம் அந்தப் பழையாறைச் சோழரின் தூண்டுதலாலேயே அவர் அப்படிச் செய்திருப்பார்!'' என்று கூறினான் ஏரி வாரியத் தலைவனொருவன்.

''கும்பாபிஷேகம் நடத்தப் பெறாமல் வெறும் கோட்டமாக இருக்கும் இந்தப் பரமேசுவர கிருகத்தில் ஆந்திர இளவரசியார் வந்து தங்கியிருக்கிறார் என்பதை அறிந்து, அவரைப் பழி வாங்க வேண்டும் என்பதற்காகவே அவர்கள் இந்த அநியாயச் செயலைச் செய்திருப்பார்கள்!''

''என்னால் இதை நம்ப முடியாது. ஏனென்றால், இந்த ஊரில் வாழும் நமக்கே, ஆந்திர இளவரசியார் இங்கு வந்து தங்கி யிருந்த விஷயம் நேற்று வரை தெரியாது! அவர்களுக்கு மட்டும் எப்படி அது தெரிந்திருக்கும்?''

''உமக்கும் எனக்கும் இரண்டு கண்கள்; சதிகாரர்களுக்கோ உடம்பெல்லாம் கண்கள்!''

''சரி; அப்படியே இருக்கட்டும். ஆனால், பந்தல் தீப் பிடித்து எரிந்து கொண்டிருந்தபோது கலைவிரி கோலமாக ஓடி வந்த பழையாறைச் சோழர் தீயை அணைக்க அரும்பாடு பட்டாரே!''

''அதெல்லாம் வெறும் வேஷம்! செய்த குற்றத்தை மறைப்பதற்காக, அவர் ஆடிக் காட்டிய நாடகம்!''

''அது எப்படியாவது போகட்டும். கூரைப் பந்தல் எரிந்தபோது கோயிலினுள்ளிருந்த உத்தமசீலியாரின்கதி என்ன ஆயிற்று? அதைச் சொல்லுங்கள்!''

''அந்தத் தகவல்தான் இன்னமும் யாருக்கும் தெரியவில்லை! நேற்றிரவு முதல் இன்று இந்நேரம்வரை அப்படியிப்படி நகராமல், அதோ கோயிலின் பிரதான வாயிலிலேயே அந்த எமலிங்கரர் நின்றுகொண்டிருக்கிறாரே, அவரைக் கடந்து உள்ளே செல்ல யாருக்குத் துணிவு வரும்?''

இவ்வாறு பேசிக் கொண்ட நகர்க் காவல் அதிகாரியும், ஏரி வாரியமும் நிமிர்ந்து அவ்வழகிய கற்கோயிலின் முகப்பு வாயில் பக்கம் தமது பார்வையைச் செலுத்தினர்.

அங்கே, கறுத்த முகமும் வெறித்த பார்வையுமாகப் பிரமை பிடித்தவர் போல் நின்றுகொண்டிருந்தார் பழையாறைச் சோழர்!

கோயிலைச் சுற்றிக் குழுமியிருந்த ஜனக் கூட்டத்தினிடையே திடீரென்று ஒரு சலசலப்பு ஏற்பட்டது. பீதியும் குழப்பமும் நிறைந்து படபடத்து இலட்சோப இலட்சம் கண்கள் ஒரே திசை நோக்கித் திரும்பின.

கூரம் ஏரி எனப்படும் பரமேசுவர தடாகத்துக்கு அப்பால் மிகத் தொலை தூரத்தில் — காஞ்சியிலிருந்து கூரத்துக்கு வரும் சாலையில்—புழுதிக் கூடாரம் ஒன்று சுழித்தெழுந்து வெகு வேகமாக முன்னே வருவது தெரிந்தது. அதைத் தொடர்ந்து மத்தள வாசிப்பு போன்ற குதிரைக் குளம்பொலியும் கேட்டது.

ஜனங்களிடையே கசமசவென்ற பேச்சு: அவலமும் திகிலுமான பரபரப்பு.

அந்தப் புழுதிக் கூடாரத்திலிருந்து மின்னலொன்று வெளிப்பட்டாற்போல் ஒரு வெள்ளைப் புரவி வாயு வேகமாகப் பாய்ச்சலிட்டு வருவது இப்போது இலேசாகத் தெரியலாயிற்று.

''உத்தம.... சீலி!'' — எண்டிசையும் அதிர்ந்து நடுங்கும்படியான ஓர் அவலப் பெருங் குரல்.

''ஹிஹ்ஹ ஹிஹ்ஹ ஹிஹ்ஹ!....'' குதிரையின் பயங்கரக் கனைப்பொலி.

''அதோ, நம் பேரரசர் பரமேசுவரவர்மர்தான் வருகிறார்!'' — ஜனங்கள் அங்கு மிங்குமாகக் கலைந்து ஓடி மீண்டும் சிறு சிறு கூட்டமாகக் கூடினர்.

காஞ்சிச் சாலையை விட்டு ஒரு கொடிப் பாதையில் திரும்பிக் காற்று வேகமாகப் பாய்ந்து வந்த அந்த வெள்ளைப் புரவி, கூரம் ஏரியிலிருந்து பிரிந்து ஓடிய கால்வாய் ஒன்று குறுக்கிடவே அதை அப்படியே தாவித் தாண்டியது.

அடுத்த கணம், அங்கு என்ன நடந்ததோ — தாண்டிய குதிரை தடாலென ஒரு பக்கம் போய்க் குப்புற வீழ, அதனைச் செலுத்தி வந்த பரமேசுவரவர்மன் கால்வாய்த் தண்ணீரில் தூக்கி எறியப்பட்டான்!

இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஜனக் கூட்டம் 'ஹோ'வென்று அலறிக் கூவியது.

ஆனால் சில விநாடி நேரத்துக்கெல்லாம் கால்வாயை நீந்திக் கரையேறிய பரமேசுவரவர்மன் கோயிலை நோக்கித் தள்ளாடித் தள்ளாடி வரலானான். சுருண்டு விழுந்த 'அதிசயம்' மட்டும் மறுபடி எழுந்திருக்கவேயில்லை.

எங்கும் ஒரே நிசப்தம்.

தெப்பமாக நனைந்த கோலத்தில் கோயிலின் பிரதான வாயிலுக்கு எதிரே வந்து நின்றான் பரமேசுவரவர்மன். அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய மாக் கதவு தீயினால் சிறிதளவு சேதப்பட்டு ஒருக்களித்துச் சாத்தியிருக்க, அதன் அருகில் சிலைபோல் விறைத்து நின்று கொண்டிருந்தார் பழையாறைச் சோழர்.

பரமேசுவரவர்மன் அவரை அமைதியாக ஏறிட்டு நோக்கினான். அவரும் அவனை நிமிர்ந்து பார்த்தார். மறுகணம், அவர் கண்களிலிருந்து புதுப் புனலென நீர் கொப்பளித்துக் கொட்டியது. வாயிலை விட்டு ஒடி விலகி நின்றார் அவர்.

முற்றும் துறந்த முனிவன்போல் ஓர் இளநகை புரிந்த பரமேசுவரவர்மன் வலது காலை முன்னே எடுத்து வைத்துக் கோயிலுக்குள் பிரவேசித்தான்.

அதற்குள் கட்டு மீறிப் போன ஜனங்கள் ஒருவரோடு ஒருவர் முட்டி மோதிக்கொண்டு கோயிலில் நுழைந்து விட்டனர். இந்தச் சமயம், வெளியே இரண்டு ரதங்களும், ஒரு குதிரையும் வந்து நின்றன. அவற்றிலிருந்து இறங்கிய மகாராணி காடவன்மாதேவியும், பெரும்பிடுகு முத்தரையரும், பாவாதி மல்லரும், புஷ்பசேனரும் அரக்கப் பரக்க உள்ளே சென்றனர்.

கோயிலின் கருவறையை நோக்கி நடந்த பரமேசுவரவர்மன் தயங்கி நின்று தன் பார்வையைச் சுற்றிலும் ஓட்டினான்.

கருவறை வெறுமனே இருந்தது. அவ்வாறே மற்றத் தெய்வத் திருப் பீடங்களும் காட்சியளித்தன. ஆனால் அவ்வந்தப் பீடங்களில் பிரதிஷ்டை செய்வதற்கான அழகிய விக்கிரகங்கள் அதனதன் பக்கத்தில் வைக்கப் பெற்றிருந்தன. அதனால் அந்தக் கோயில் இப்

---

**இந்தக் கதையில் வரும் ஒரு காட்சியை அட்டைப்படமாகச் சித்திரித்திருக்கிறார் 'விஜு'.**

> 'இந்தியாவின் மண்ணே எனக்கு விண்ணுலகம்; இந்தியாவின் நலனே எனது நலன்' என்று கூறி, 'கௌரி நாயக! ஜகதம்பிகே! எனக்கு ஆண்மையை அளித்தருள்! சக்தி அன்னாய், என் பலவீனத்தைப் போக்குக! என்னை ஆண் மகனாக்குக!' என்று அனவரதமும் பிரார்த்திப்பாயாக! —ஸ்வாமி விவேகானந்தர்.

போது முழுமையாக விளங்கவில்லை; முற்றுப் பெறாத ஒரு பளிங்குக் கோட்டமாகத் தோற்றமளித்தது.

திருநிலையறைக்கு வெளியே வலப் பக்கவாட்டில் அற்புதச் சிற்ப வேலைப் பாடுகளுடன்கூடிய ஒரு பாரிய கல் தூண் நின்றிருந்தது. அதன் எதிரே கருவறையில் பிரதிஷ்டை செய்வதற்கென உருவாக்கிய — சாஸ்திர முறைப்படி அபிஷேகம் செய்யப் பெறாத — அழகிய சிவலிங்கம் ஒன்று நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. இவற்றின் இடையே, காய்ந்து வெளுத்த தருப்பைப் புற்கள் பாவலாகத் தூவிக் கிடக்க, அந்தப் புல் விரிப்பின் மேல், வெள்ளை ஆடையும் அவிழ்ந்த கூந்தலுமாக, இளைத்து வெளுத்து மெலிந்த கோலத்தில், கழுத்திலே வாடிக் கருகிய ஆதொண்டை மலர் மாலை யொன்றுடன், வடக்கு நோக்கித் திரும்பி, அரைப் பிரக்ஞையில் கண்மூடிச் சோர்ந்து துவண்டு தூணிலே சாய்ந்தவாறு அமர்ந்திருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி. அவள் எதிரேயிருந்த சிவலிங்கத்தின் திருச்சுற்று வட்டத் தட்டில், உருத்திராக்க மணிகளுடன் விலை மதிப்பற்ற நவரத்தினங்களும் பொறித்து உருவாக்கிய எழில் மிகு கிரீடம் ஒன்று வைக்கப் பெற்றிருந்தது!

உத்தமசீலி வடக்கிருத்தல் நோன்பை மேற்கொண்டு விட்டாளா? ஆமாம்; அந்தப் புனித சல்லேகனையில்தான் அவள் இப்போது ஆழ்ந்திருக்கிறாள்!

இவ்வளவையும் பார்த்துக் கொண்டு நின்ற பரமேசுவர வர்மனின் முகத்தில் எவ்வித உணர்ச்சியும் இழையோடவில்லை. அமைதியாக நடந்து போய் அவளருகில் ஒற்றை முழந்தாளிட்டு அமர்ந்து அவள் முகத்தைநேரிட்டு நோக்கினான்.

"உத்தம....சீலி!..."

மிக மிக மென்மையான இந்த அழைப்பைக் கேட்டு மெல்லக் கண் திறந்தாள் உத்தமசீலி. வெளுத்து வறண்ட அவள் அதரங்களில் ஒரு புன்னகை தவழ்ந்தது. உலர்ந்து ஒட்டிய முகத்தில் ஒரு தெய்வீக ஒளி சுடர் விரித்தது. பொன்வண்டின் உட்சிறகுகள் துடிப்பதுபோல் கண் இமைகள் மிருதுவாகப் படபடக்க, பார்வையை மலர்த்தினாள் அவள். உட்குழிந்து சுருங்கிய அவளது கண்டத்திலிருந்து காற்றிழைசை போன்ற மென் குரல் ஒன்று எழுந்தது:

"பிரபு!..."

பரமேசுவரவர்மன் அவளைப் பார்த்து அழகாகச் சிரித்தான்! சிரிப்பா அது? ஈரேழு பதினான்கு லோகங்களின் சகல விதமான அவலங்களும் அந்தச் சிரிப்பில் நிறைந்து வழிந்தன!

அவனுடைய திண்ணிய கழுத்தில் தவழ்ந்த சவுக்கைக் காய் மாலையின்மீது தன் பார்வையைப் பதித்திருந்த உத்தமசீலி, நிமிர்ந்து, அந்த உருத்திராக்க மணிகளாலான கிரீடத்தை நோக்கினாள். மிகவும் சிரமப்பட்டுத் தன் மெலிந்த கைகளை மேலே உயர்த்திச் சிவலிங்கச் சுற்றுத் தட்டின் மேலிருந்த கிரீடத்தை மெல்ல எடுத்தாள்.

பரமேசுவரவர்மனின் கண்கள் முதன் முறையாக நீர் முத்துக்களைப் பிலிற்றின. அவனையறியாமலே அவனது கரங்கள் குவிந்து, தலை தாழ்ந்தது.

பின்னால் குழுமி நின்ற பெருங் கூட்டத்திலிடையே விசும்பல் ஒலி! வெளியே நாட்டப் பெற்றிருந்த கொடி மரத்தின் இலை மணிகள் காற்றிலே குலுங்கி எழுப்பிய ஓசை!



ஆந்திர இளவரசி உத்தமசீலி, பல்லவப் பேரரசின் மாமன்னனான பரமேசுவரவர்மனின் சென்னியில், உருத்திராக்க மணிகளாலான பொற்கிரீடத்தைச் சூட்டினாள். அவள் கரங்கள் நடுங்கின. ஆயினும் மிகுந்த பிரயாசையுடன், தன் கழுத்தில் கருகிக் காய்ந்து தவழ்ந்து கொண்டிருந்த ஆதொண்டை மாலையைக் கழற்றி யெடுத்து அவனுடைய கழுத்தில் அணிவித்தாள்.

"சமணச் செல்வி உத்தமசீலி இதோ சைவச் செல்வர் பரமேசுவரவர்மரின் பட்டமகிஷியாகி விட்டாள்!"

உத்தமசீலியின் வதனத்தில் ஒண்ணொளி வீசும் வெற்றிக் களிப்பு. அவள் சிரித்துக் கொண்டே அவனது குளிர்ந்த மார்பில் சாய்ந்தாள்.

அடுத்த கணம், அந்த உத்தமப் பத்தினிப் பெண்ணின் கரு நீலக் கண்கள் சர்வ சுகானந்தப் பெருந் துயிலில் ஆழ்ந்தன.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# ஏழு வைட்டமின்கள் சேர்ந்தது, அமுல் பாலுணவு - அவை செய்வது என்னென்ன?

**வைட்டமின் ஏ**

தோலை மிருதுவாக வைத்துக்கொள்கிறது. கண்களை பிரகாசமாக்குகிறது; வளர்ச்சிக்கு உதவுகிறது.



**வைட்டமின் பி1**

நரம்புகளை உறுதிப் படுத்துகிறது; மார்பில் உள்ள தசைநார்களைப் பலப்படுத்துகிறது.



**வைட்டமின் பி2**

வாயின் ஆரோக்கியத்திற்கு இது அவசியம்.



**வைட்டமின் பி6**

தசை நார்கள் இளைப்பாற்றிக்கொள்ள உதவுகிறது.



**வைட்டமின் சி**

நோய் பரவாமலும், சொறி பிடிக்காமலும் தடுத்து நிறுத்துகிறது.



**வைட்டமின் டி**

எலும்புகளைப் பலப்படுத்துகிறது; பற்களை நல்ல முறையில் வைத்திருக்கிறது. பக்க ரோகங்களையும் தடுக்கிறது.



**நியசினமைடு**

ஜீரணத்தை எளிதாக்குகிறது. நரம்புகளை உறுதிப்படுத்துகிறது; தோலை ஆரோக்கியமுடன் வைத்திருக்கிறது.



அமுல் பாலுணவில் 7 வைட்டமின்கள் சேர்ந்திருப்பதோடு சம அளவில் புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, இரும்பு, சுண்ணாம்பு, பாஸ்பரஸ் சத்துக்களும் கலந்துள்ளன. அமுல் சிறப்புவாய்ந்த உணவின் மதிப்பைப் பெற்றிருப்பதால் இக்காலத் தாய்மார்கள் இதையே தேர்ந்தெடுக்கிறார்கள். உங்கள் குழந்தைக்கு இது மிகச் சிறந்தது.

**அமுல்** பாலுணவில் உங்கள் குழந்தைக்குத் தேவையான 7 வைட்டமின்கள் உள்ளன.






ASP/ABF-31.TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

